# அருள் விருந்து புத்தகங்கள்

தர்ம சக்கரத்தில் மாதந்தோறும் அருள் விருந்து என்னும் தலைப்பில் உயரிய கருத்துக்கள் வெளிவந்து கொண்டிருப்பதைச் சந்தாதாரர்கள் படித்திருக்கலாம். பல ஆன்றோர்களுடைய சிந்தனைகளை எல்லாம் ஆழ்ந்து சிந்தித்துப் பிறகு அவைகள் அருள் விருந்து என்னும் தலைப்பில் எழுதப்பட்டு வருகின்றன. எனவே அவைகளைப் புத்தக வடிவத்தில் பெற்று எப்பொழுதும் படிப்பதற்கு ஏற்றவாறு பத்திரம் பண்ணி வைப்பது அவசியமாகிறது.

எவ்வப்பொழுதெல்லாம் மனதுக்குச் சஞ்சலமும், சந்தேகமும் வருகின்றதோ அவ்வப்பொழுதெல்லாம் அருள் விருந்து என்னும் புத்தகத்தைப் படித்து சஞ்சலத்தையும், சந்தேகத்தையும் போக்கிக்கொள்ளலாம். அருள் விருந்து என்னும் புத்தகத்தை ஞான சஞ்சீவியாகக் கொள்ளலாம். அப்புத்தகம் ஒவ்வொருவர் கையிலும் இருப்பது அவசியமாகிறது. சிந்தனைக்கு வேலை வேண்டுமென்றால் அருள் விருந்து என்னும் இந்த நூலை எடுத்துப் படித்தால் போதும். சிந்தனையை நற்சிந்தனை ஆக்குதற்கு அருள் விருந்து என்னும் நூலைப் போல நல்ல துணை நமக்கில்லை. தர்ம சக்கரம் பத்திரிக்கையில் வந்துள்ள அருள் விருந்துகளை எல்லாம் ஒன்று திரட்டி பாக்கெட் சைஸ் புத்தக வடிவத்தில் தபோவனம் வெளியிட்டுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் 12 மாதங்களில் தர்ம சக்கரத்தில் வெளிவந்த அருள் விருந்து பகுதிகளைச் சேர்த்து ஒரு புத்தகமாக ஆக்கியுள்ளோம்.

அருள் விருந்தில் சில மாதிரிகள்:

பரத்தை நோக்கிச் சத்திய மார்க்கத்தில் செல்லும் யாத்திரிகன் தீமைக்கு அடிமைப் படுவதில்லை; நன்மைக்கு அவன் தலை வணங்குகிறான்.

சோதனைகளைச் சமாளிக்குமளவு ஒருவனுடைய பண்பாடு ஓங்குகிறது.

கடவுள் நமக்குச் சொந்தம். அவரை உபத்திரவப்படுத்த நமக்கு உரிமை உண்டு.

பக்தி தாய் போன்றது; ஞானம் தந்தை போன்றது. சுத்த பக்தியும் சுத்த ஞானமும் ஒன்றே.

பிறக்கும் சிசு உண்மையில் சிசு அல்ல; சிசு உருவத்தில் வரும் பழைய ஜீவன்.

ஆசையற்றவிடத்து ஆனந்தம் மிளிர்கிறது.

25 ஆண்டுகளில் தர்ம சக்கரத்தில் வந்த அருள் விருந்துப் பகுதிகளை 25 புத்தகங்களாக வெளியிட்டுள்ளோம். தனிப்பிரதி விலை 30 பைசா. 25 புத்தகங்களையும் சேர்த்து ஒரு புத்தகமாக பைண்டு செய்து பெற விரும்புகிறவர்களுக்கு ரூபாய் 10-00க்குத் தரலாம். தபாலில் பெற விரும்புகிறவர்களுக்குத் தபால் செலவு ரூபாய் 4-00 ஆகும். ரூபாய் 14-00ஐ மணி ஆர்டரில் அனுப்பி வைத்தால் பதிவுத் தபாலில் புத்தகத்தை அனுப்பி வைக்கிறோம்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா.

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ மார்கழி மீ | ஆரம் 12 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா : ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூற்றைம்பதையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா : ரூ. 15 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா : மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக உள்ளவர்கள் ஆண்டு சந்தா பதினைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூபாய் பத்து அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி'யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூ, 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பொது நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா : ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா : ரூ. 35-00**

# அந்தர்யோக விவரங்கள்

**மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 25—12—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்
*நேரம் :* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 1—1—84 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* சி.ச. அண்ணாமலை நாடார் கல்யாண மண்டபம் (பெரிய காளியம்மன் கோவில்)
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—சாத்தூரில் 1—1—84 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* S. H. N. எட்வர்டு ஆண்கள் உயர்நிலைப்பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**கோவை ஜில்லா—பொள்ளாச்சியில் 7—1—84 சனிக்கிழமை**

*இடம்:* காந்தி மண்டபம்
*நேரம்:* காலை 10-00மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**பல்லடம் தாலூகா—புளியம்பட்டியில் 7—1—84 சனிக்கிழமை**

*இடம் :* மாகாளி அம்மன் கோவில்
*நேரம்:* இரவு 7-00 மணிமுதல் 9-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 8—1—84 ஞாயிற்றுக்கிழமை**

*இடம் :* ஸ்ரீ விவேகானந்த கல்லூரி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* நேரில் பகல் உணவுக்கு ரூ. 1-50; மாலைச் சிற்றுண்டி 0-75 பைசா செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**கோவை ஜில்லா—குமரன்குன்று ஆலயத்தில் 8—1—84 ஞாயிறு**

*இடம்:* அருள்மிகு ஸ்ரீ கல்யாண சுப்பிரமணிய சுவாமி ஆலயம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-00 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

---

*அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.*

# தர்ம சக்கரம்

சக்கரம் 32 துந்துபி வூ தை-ருத்ரோத்காரி வூ மார்கழி

1983



प्रज्ञानं ब्रह्म

எழுமின் விழிமின் செந்நெறி சார்மின்

ஆசிரியர்
சுவாமி நித்தியானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை — 639 115 திருச்சி ஜில்லா

# பொருளடக்கம்




प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹு மார்கழி மீ | ஆரம் 12

## பிரார்த்தனை

क्व मृत्युर्जीवितं वा क्व लोकाः कास्य क्व लौकिकम् ।
क्व लयः क्व समाधिर्वा स्वमहिम्नि स्थितस्य मे ॥

— अष्टावक्रसंहिता

க்வ ம்ருத்யுர் ஜீவிதம் வா க்வ லோகா: க்வாஸ்ய க்வ லௌகிகம் ।
க்வ லய: க்வ ஸமாதிர் வா ஸ்வமஹிம்னி ஸ்திதஸ்ய மே ॥

— அஷ்டாவக்ரஸம்ஹிதா

என் நிஜசொருபமாகிய பரமாத்மாவில் திளைத்திருக்கும் எனக்கு மரணம் எங்கே? ஜீவிதம் எங்கே? உலகமும் உலக விஷயங்களும் எங்கே? மனத் தளர்வும் ஒருமைப்பாடும் எங்கே?

தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும்போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டுபோவார்
எந்தநாள் வாழ்தற்கே மனம் வைத்தியால் ஏழைநெஞ்சே
அந்தண் ஆரூர் தொழுதுய்யலாம் மையல்கொண் டஞ்சல்நெஞ்சே.

— சம்பந்தர் தேவாரம்

# அருள் விருந்து

நம்பிக்கையினும் மிக்கது யுக்தி.

திரிகரணங்கள் சுத்தியடைவது சன்மார்க்கமாம்.

கடவுளிடத்துக் கருவியாயிருப்பவன் பிழைபோகான்.

அமைதியுற்றிருப்பதோடு இணக்கம் கொள்ளுதல் எளிது.

தன்னைக் கட்டி ஆள்பவன் யாண்டும் இன்புற்றிருக்கிறான்.

கொந்தளிப்பு அமைதியுறுமாறு உன்னை நீ அடக்கியாள்வாயாக.

பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்வதே கலைகள் அனைத்திலும் சிறந்ததாம்.

மனதுடன் போராடிக்கொண்டிருக்கிறவன் இன்னும் பண்பாட்டில் மேலே வரவில்லை.

இறைவன் அருளுக்குப் பாத்திரமாயிருப்பவன் யாண்டும் நன்கு காப்பாற்றப் படுகிறான்.

பிறருக்கு இன்பம் வழங்குபவன் பிறரிடமிருந்து இன்பத்தைப் பெறுபவனை விட மேலோனாகிறான்.

பண்பட்டுள்ள சான்றோன் உலகத்தவரின் நிந்தையையும் ஸ்துதியையும் பொருட்படுத்துவதில்லை.

பணிவிடை பண்ணுவது நான் கையாளும் சமயம்; எதிர்காலத்தைக் குறித்து நான் கவலைப்படுவதில்லை.

அருளுக்குப் பாத்திரமாயிருப்பவனுக்கு உலக வசதிகள் போதாவிட்டால் அது அவனுக்குக் குறையாகத் தோன்றுவதில்லை.

பல ஆண்டுகளாக ஓயாது பொருளைப் பிறருக்கு எடுத்துக் கொடுப்பவனை விடச் சிறிது நேரம் சான்றோன் ஒருவனைப் போற்றுபவன் மிக்கானாகிறான்.

ஆசையும் சினமும் எக்கணத்தில் வேண்டுமானாலும் விவேகத்தைப் பாழ்படுத்துகின்றன. ஆதலால் அவைகளைக் குறித்து ஆத்மசாதகன் எச்சரிக்கை மிக எடுத்துக்கொள்ள வேண்டும்.

கடலில் எண்ணிறந்த அலைகளில் சூரிய பிம்பங்கள் தோன்றவும் ஒடுங்கவும் செய்கின்றன. அதை முன்னிட்டு மூல சூரியன் பாதிக்கப்படுவதில்லை. அதேவிதத்தில் பிரகிருதியின்கண் கோடிக்கணக்கான ஜீவாத்மாக்கள் தோன்றவும் ஒடுங்கவும் செய்கின்றன. அதை முன்னிட்டுப் பரமாத்மனுக்கு லாப நஷ்டம் ஏதுமில்லை.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

மகிம்சரண் கிரீஷ்சந்திரகோஷரிடம் பகர்ந்த தாவது: "ஆம் ஐயனே! ஞானமார்க்கமும் பக்தி மார்க்கமும் பரத்தின்கண்ணே சாதகனை அழைத்துச் செல்கின்றன. இங்கு வீற்றிருக்கும் இப் பரமஹம்சதேவரும் இக்கூற்றையே வற்புறுத்துகிருர்."

மகிம்சரணிடம் பரமஹம்சதேவர் பகர்ந்த தாவது: "எல்லா மார்க்கங்களும் பரமனை அடைதற்கே ஏற்ற உபாயங்களாய் அமைந்திருக்கின்றன அல்லவா?"

மகிம்சரண்: "ஆம் ஐயனே! தாங்கள் பகர்ந்தருள்கின்றபடி இரண்டு மார்க்கங்களும் ஒரே லட்சியத்தின்கண் சாதகனை அழைத்துச் செல்கின்றன."

இப்பொழுது பரமஹம்சதேவர் கிரீஷ்சந்திரரிடம் பகர்ந்ததாவது: "இவரிடம் எத்தகைய ஆழ்ந்த தெய்வ விசுவாசம் இருக்கிறது என்பதை நீ பார்க்கிருய் அல்லவா? இவர் முன் னிலையில் நீ வைத்த சிற்றுண்டியை இவர் பொருட்படுத்தவில்லை. தாம் கொண்டுள்ள கொள்கையிலேயே இவருடைய மனது ஆழ்ந்து மூழ்கியிருந்தது. அக்கொள்கையில் அவர் வைத்துள்ள விசுவாசத்துக்கு அது அத்தாட்சியாகும். அக்கொள்கையை மட்டும் நீ மறுத்திருப்பாயானல் உன்னை அவர் பிய்த்து உதறித் தள்ளியிருப்பார். அதற்கு மாருக நீங்கள் இருவரும் தக்க முறையில் அவரவர் கருத்தை எடுத்து வழங்கினீர்கள். அதைக் கேட்டு நாங்களும் மிக ரசித்தோம். ஒருவர் கருத்தை மற்ருெருவர் அறிந்துகொள்ளாது வீண்விவாதம் பண்ணுகின்றனர் மக்கள். நீங்களிருவரும் அப்படிச் செய்யவில்லை. நீங்கள் நடாத்திய சம்வாதம் மற்றவர்களுக்கும் பாடம் புகட்டும் பான்மையில் அமைந்திருந்தது".

பாடகன் இப்பொழுது அங்கு வந்து சேர்ந்து அறையின் நடுவே அமர்ந்தான். அவனுடன் பக்கவாத்தியக்காரர்களும் வந்திருந்தார்கள். பாடலைத் தொடங்குதற் பொருட்டுப் பரமஹம்சதேவருடைய அனுமதியை அங்கு வந்தவன் எதிர்பார்த்திருந்தான். அன்னவன் பாடுதற்கும் பரமஹம்சதேவர் அனுமதி கொடுத்தார்.

இப்பொழுது ராம் என்னும் பக்தர், "இப் பாடகன் எத்தகைய பாடலைப் பாடட்டும் என்பதைக் கிருபை கூர்ந்து தாங்கள் பகர்ந்தருள்வீர்களாக' என்று பரமஹம்சதேவரிடம் வேண்டினர்.

பரமஹம்சதேவர்: "நான் பகர்வதற்கு யாது உளது?" அவர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு, "கிருஷ்ணன் ஸ்ரீமதி ராதையைச் சந்திப்பதற்கு முன்பு இருந்த நிலையை வர்ணித்து இப்பாடகன் பாடட்டும்" என்ருர்.

பாடகன் பாடியதாவது: "ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் என் உயிருக்குயிராவார். மக்களுள் மாணிக்கம் என்று அவரைப்பற்றிப் பகரலாம். ஸ்ரீமதி ராதையைக் குறித்து அவர் பாடியபொழுது தரையில் வீழ்ந்து புரண்டார்; கதறிப் பதறி அழுதார். பேரன்புடன் அவளுடைய நாமத்தை மீண்டும் மீண்டும் அவர் பகர்வாராயினர். ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாக அவருடைய கண்களினின்று பொழிவதாயிற்று. மீண்டும் ஒரு முறை அவர் பூமியில் படுத்துப் புரண்டார். அந்தப் பக்திமதியின் நாமத்தை உச்சரிக்க உச்சரிக்க அவர் தாமே ஆனந்தப் பரவசநிலையில் மூழ்கினர். அவருடைய மேனி முழுதும் மயிர்க்கூச்செடுத்திருந்தது. ஒரே ஒரு சொல்லைத் தழுதழுத்த குரலிலே அவர் கூறினர். 'இங்ஙனம் கிருஷ்ண சைதன்யர் பதைபதைப்புற்றிருந்ததற்குக் காரணம் யாது?' என்று வாசு வினவுகிருன்."

பாடகன் தொடர்ந்து பாடியதாவது: "யமுனை நதிக்கரை ஓரத்திலே ஒரு கடம்ப மரத்தின் அடியிலே ஸ்ரீமதிராதை கண்ணனைப் பார்த்தாள். அப்போது அவள் படைத்திருந்த மனப்பாங்கையும் உடல் நிலையையும் அவளுடைய தோழிமார்கள் வர்ணிக்கிருர்கள்: அவள் இடையருது அறையினுள் வருவதும் வெளியே போவதுமாக இருக்கிருள். பதைபதைப்பே வடிவெடுத்தவளாக அவள் தென்படுகிருள்.

அவளிடம் பெருமூச்சு வாங்குகிறது. கடம்ப மரத்தைப் பார்த்த வண்ணமாகவே அவள் இருக்கிறாள். தன் வீட்டு முதியோர்களைக் குறித்து அவள் அச்சம் கொண்டிருக்கிறாளா? அல்லது அவளைப் பேய்தான் பிடித்துக்கொண்டிருக்கிறதா? பதைபதைப்பின் விளைவாக அவள் அணிந்திருந்த ஆடை அலங்கோலத்துடன் தென்பட்டது. அவள் மேனியினின்று அணிகள் சில நழுவிக் கீழே விழுந்துகிடக்கின்றன. விதிர்விதிர்த்த வண்ணமாய் அவள் இருக்கிறாள்."

"அந்தோ! அவள் இளமையே வடிவெடுத்திருக்கிறாள். பிறப்பில் ராஜகுமாரி போன்று தென்படுகிறாள். அதற்கிடையில் மனுட்டி ஒருத்தியின் காட்சியையும் அவள் தருகிறாள். அவள் நாடுவதுதான் யாது? அவளுடைய மனதை யாரே படம்பிடிக்க வல்லவர்! வெண்ணிலாவையே எட்டிப்பிடிக்கும் பாங்கில் அவள் பதறிக்கொண்டிருக்கிறாள் என்று யூகிக்க அவள் காட்சி இடம் தருகிறது. 'கண்ணனுடைய மாயவலையிலே ராதை அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள்' என்று சண்டிதாஸ் பணிவுடன் பகர்கிறான்.''

பாடகன் தொடர்ந்து பாடுகிறான்:

ராதையின் தோழிமார்கள் அவளிடம் வினவுவதாவது:

"இனிய முகம் படைத்துள்ள ராதையே! உன்னைத் துன்புறுத்துவது யாது? தயை கூர்ந்து உன் மன வருத்தத்தை எங்களுக்கு எடுத்து இயம்புவாயாக. உன் மனது ஏன் இங்குமங்கும் அலைந்து திரிகிறது. துயருற்றவள்போல் நீ ஏன் நிலத்தைப் பிடிக்க முயலுகின்றாய்? உன்னுடைய பொன்னார்மேனி ஏன் பூமியில் புரண்டு அடுப்புக்கரியின் நிறத்தை எடுத்துக்கொண்டிருக்கிறது? உன்னுடைய மேலாடையை நீ மறந்துவிட்டாய். அது நிலத்தில் விழுந்து கிடக்கிறது. நீ கண்ணீர் கொட்டுவதன் விளைவாக உன் கண்கள் சிவந்திருக்கின்றன. தாமரைக்கு நிகரான உன் முகவிலாசம் வாடியிருக்கிறது. உன் துயரத்தைப் பார்த்து நாங்கள் நெஞ்சம் உடைந்தவர்களாய் இருக்கிறோம். உன்னை வாட்டுவது யாது? தயை கூர்ந்து பகர்வாயாக."

அங்ஙனம் அவளுடன் வினவியவர்களுக்கு ராதை விடுத்த விடையாவது: "கிருஷ்ணனுடைய முகவிலாசத்தைப் பார்த்து நான் மனம் குளிர்ந்திருக்க வாடுகிறேன்.''

பாடகன் பாடிய அடுத்த பாடலாவது:

''கிருஷ்ணன் மீட்டிய புல்லாங்குழல் ஓசையைக்கேட்டு ராதை பரவசநிலையில் பைத்தியம் பிடித்தவள் போல் ஆய்விட்டாள். தன் தோழிமார்களிடம், ''இந்தக் கடம்ப வனத்தில் வீற்றிருந்துகொண்டு என் உள்ளத்தைக் கவர்கின்ற கள்வன் யார்? அவன் கிளப்பும் குழலோசை காதுகள் வாயிலாக என் உள்ளத்தினுள் சென்று அதைக் கட்டிப் பிடிக்கின்றது. என் சொருபத்தினுள் ஊடுருவிப் பாய்ந்து நான் புரிகின்ற தர்மத்தைக் கலைத்து என்னைப் பித்துப் பிடித்தவளாக்குகின்றது. அது என்னைச் சஞ்சலப்படுத்துகின்றது; கண்ணீர் தாரை தாரையாக வரும்படி செய்கிறது; மூச்சுத் திணறுகிறது. அவன் கிளப்புகின்ற குழலோசையின் மகிமைதான் என்னே! அதைக்கேட்டு நான் முற்றும் அதன் வசப்பட்டவளாகிறேன். காட்சிக்கெட்டாது அவன் மறைந்திருப்பதால் என் உள்ளம் துடிக்கிறது. மேலும் இங்கு தாமதித்திருப்பது எனக்குச் சாத்தியப்படாது. அவனைக் காணவேண்டும் என்கின்ற துடிப்பு என்னை வாட்டுகிறது. தாங்கவொண்ணாத் துயரத்தில் அழுந்திக்கிடக்கும் என் உள்ளம் அவனை மீண்டும் ஒரு முறை தரிசிக்க வேண்டும் என்று திணறுகிறது" என்று முறையிட்டாள்.

இது உத்தவன் கருத்து: 'ஆனால் ஓ ராதையே! நீ அவனைப் பார்த்த மாத்திரத்தில் உன் உயிர் உன்னிடமிருக்காது.'

மற்றொரு பாடலைப் பாடகன் பாடுகிறான்.

கிருஷ்ணனைக் காணுதல் பொருட்டு ராதையின் ஹிருதயம் துடிதுடிக்கிறது. தன்னுடைய தோழிமார்களிடம் அவள் இயம்புகிறதாவது:

''முதன் முதல் கடம்பவனத்தினின்று உள்ளத்தைக் கவர்கிற அவனுடைய இன்னிசையைக் கேட்டேன். அடுத்த நாள் அவனுடைய மகிமைகளைக் குறித்துப் பாடகன் எனக்கு எடுத்துரைத்தான். அது என் உள்ளத்தை அறவே கவர்ந்துகொண்டது. மற்றொரு நாள் என் அன்பிற்கினியாளே, நீ அவனுடைய நாமத்தை உச்சரித்தாய். கிருஷ்ணன் என்னும்

நாமமானது தேனினும் இனியதாக இருப்பதை நான் உணர்கிறேன். முனிவர்கள் அவனுடைய மகிமைகளுக்கு முடிவில்லை என்று எடுத்து மொழிந்தார்கள். மெல்லியல்பு படைத்த சிறுமி ஒருத்தியாக நானிருக்கிறேன். மற்று என் பெற்றோர்களோ கல்நெஞ்சம் படைத்தவர்களாகக் காணப்படுகின்றார்கள். என் உயிர்க்குயிராய் இருப்பவனிடம் என் அன்பு ஓங்கி வளர்கின்றது. அவனைப் பிரிந்து நான் எப்படி வாழ்ந்திருக்க முடியும்? ஆழ்ந்து எண்ணிப் பார்க்குமிடத்து அவனை நாடி உயிர் துறப்பது சாலச் சிறந்தது என்று எனக்குத் தோன்றுகிறது. என் ஆருயிர்க்குயிராகிய கிருஷ்ணனை நான் சந்திக்கும் உபாயம் ஏதேனும் இருக்குமாகில் நீ எனக்கு அதை அன்புடன் எடுத்து இயம்புவாயாக."

'கிருஷ்ணனுடைய நாமம் தேனினும் இனியது' என்னும் விளக்கத்தைக் கேட்டவுடன் பரமஹம்சதேவர் ஆனந்தப் பரவச நிலையில் எழுந்து நின்றார். ஆழ்ந்த சமாதி நிலையில் அவர் மூழ்கினர். அவருக்கு வலப்பக்கம் இளைய நரேந்திரன் எழுந்து நின்றான். அவர் அடைந்திருந்த சமாதி நிலையினின்று ஒருவாறு அவருடைய மனது கீழ்நிலைக்கு இறங்கி வந்தது. அப்பொழுது அவருடைய வசீகரமான இனிய குரலிலே 'கிருஷ்ண' எனும் பதத்தைப் பகர்ந்தார். முத்து முத்தாகக் கண்ணீர் அவருடைய கன்னங்களின்மீது உருண்டோடிக் கீழே வீழ்ந்தது. மீண்டும் அவர் அமர்ந்தார். பாடகன் தொடர்ந்து பாடலானன். ராதையின் தோழியாகிய விசாகை என்பாள் ஓடிப்போய்க் கிருஷ்ணனுடைய படம் ஒன்றை எடுத்து வந்தாள். ராதையின் எதிரே வைத்து அப்படத்தைக்காட்டினள். "யமுனை நதிக்கரையோரம் நான் கண்ட மூர்த்தியின் படமாக இது இருக்கிறது. அன்னவனைப் பார்த்த நாள் முதற்கொண்டு நான் யாண்டும் இத்தகைய பரவச நிலையில் மூழ்கிக் கிடக்கிறேன்" என்று ராதை கூறினள்.

மீண்டும் பாடகன் பாடியதன் கருத்தாவது :

"யமுனை நதிக்கரையோரம் நான் பார்த்தவனுடைய படம் இதோ என் கண்ணெதிரே தென்படுகிறது. யாரைக்குறித்து விசாகை பகர்ந்தாளோ அப்பெருமகனுடைய வடிவம் இதோ இப்படத்தில் தென்படுகிறது. குழலோசையை மீட்டி என் ஆருயிரைக் கவர்ந்தவன் யாண்டும் எனக்குரியவனுகிறான். பாடகன் பாடிய அவனுடைய மகிமைகளெல்லாம் என் மனதை அடியோடு கவர்ந்துகொண்டன. அவனே என் அன்பிற்குரியவனுகின்றான்." இங்ஙனம் பாடிக்கொண்டு ராதை ஆனந்த பரவசம் அடைந்தவளாய்த் தரையில் வீழ்ந்தாள். அவளுடைய தோழிமார்கள் அவளைத் தூக்கிப்பிடித்துச் சாதாரண மனநிலை எய்தும்படி செய்தார்கள். அப்போது அவள் இயம்பியதாவது : 'என் உள்ளத்தினுள்ளே மிளிர்ந்துகொண்டிருக்கும் அன்னவனைத் தோழிமார்களே, எனக்குக் காட்டி அருள்வீர்களாக.' அவர்களும் அங்ஙனமே செய்வதாக அவளுக்கு வாக்குறுதி கொடுத்தார்கள்.

இதுகாறும் பாடகன் பாடியதைக் கேட்டுக் கொண்டிருந்த பரமஹம்ச தேவரும் நரேந்திரனும் கூடி இப்பொழுது உரத்த குரலிலே பாடலாயினர். அவர்கள் பாடிய பாடலில் அடங்கியிருந்த கருத்தாவது:

"ஆதோ, பாருங்கள், நித்தாய், நிமாய் என அழைக்கப்பெறும் சகோதரர்கள் இருவரும் பிரசன்னமாய் இருக்கிறார்கள். ஹரியினுடைய திருநாமத்தை உச்சரித்துக்கொண்டிருக்கையில் அவர்களுடைய கண்களினின்று தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்துகொண்டிருக்கிறது. நிமாய் என அழைக்கப்பெறும் கௌராங்க தேவருடைய பேரன்பின் வேகத்தால் நாடியா முழுதுமே நடுநடுங்குகிறது."

இங்ஙனம் பாடிய பரமஹம்சதேவர் ஆழ்ந்து சமாதியில் மூழ்கினர். பக்திப்பாடலை நரேந்திரன் பாடும்பொழுதெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதிநிலை அடைந்துவிடுவார். எனவே அன்றும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உள்ளம் சிறிது நேரம் சமாதியில் மூழ்கியிருந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு சிறிது சிறிதாக அவர் உலக ஞாபகத்துக்குத் திரும்பி வந்தார். பிறகு தாம் இதுகாறும் அமர்ந்திருந்த ஆசனத்துக்குப் பரமஹம்சதேவர் திரும்பி வந்து சேர்ந்தார். அங்கிருந்த மகேந்திரரைப் பார்த்து "நான் எந்தப் பக்கம் பார்த்துக்கொண்டு முன்பு உட்கார்ந்திருந்தேன் என்பது என் ஞாபகத்தில் இல்லை" என்று பகர்ந்தார்.

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

10-7. சாலோகம் ஆதி சவுக்கியமும் விட்டநம்பால்
மேல்ஆன ஞானஇன்பம் மேவுநாள் எந்நாளோ.

இன்பத்தை நாடுவது ஜீவாத்மாவின் பாங்கு ஆகும். அந்த இன்பமோ பிரபஞ்சத்தைச் சார்ந்ததாக இருக்கிறது. இனி, பிரபஞ்சம் நலம், கேடு இரண்டும் நிறைந்ததாக இருக்கிறது. கேடு கலவாத நலத்தை இவ்வையகத்தில் எங்குமே காணமுடியாது. ஆதலால் இதே வையகத்தில் துன்பம் கலவாத இன்பத்தையும் காணமுடியாது. அப்படியிருந்தும் இன்பத்தை நாடித் திரிவதுதான் ஜீவாத்மாவின் போக்கு ஆகிறது. அறம், பொருள், இன்பம், விடு என்னும் நான்கு புருஷார்த்தங்களுள் இன்பம் மூன்ருவது இடம் பெறுகிறது. எல்லாப் படித்தரங்களிலும் இருக்கும் உயிர்களனைத்தும் இன்பத்தை நாடுதல் பொது இயல்பாகிறது.

அங்ஙனம் இன்பத்தை நாடுகிற உயிர்களுள் அறிவுடைய மனிதன் துன்பத்தைக் குறைக்கவும் இன்பத்தை வளர்க்கவும் செய்கிருன். எங்கு இன்பம் அதிகமோ அது சொர்க்கம் எனப்படுகிறது. அதற்கு நேர்மாருக எங்குத் துன்பம் அதிகமோ அது நரகம் எனப்படுகிறது. நரகத்தைத் தவிர்க்கவும் சொர்க்கத்தைப் பெறவும் செய்கின்ற முயற்சி அலாதியாக மனிதனுக்கு உரியதாம். அங்ஙனம் அவன் நாடுகிற சொர்க்கத்தில் நான்கு படித்தரங்கள் இருக்கின்றன. சாலோக்கியம், சாமீப்பியம், சாருப்பியம், சாயுஜ்ஜியம் என அந்நான்கு படித்தரங்களுக்குப் பெயர்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. சாலோக்கியம் என்பது அதற்குரிய உலகம் எனப் பொருள்படுகிறது. மண்ணுலகில் எங்கே இன்பம் அதிகமோ, எங்கே துன்பம் குறைந்திருக்கிறதோ அப்பகுதியை மனிதனுக்கு ஏற்ற சாலோக்கியம் எனலாம்.

இனி, இக்கோட்பாடு வழிபடு தெய்வத்தோடு இணைத்து வைத்து இயம்பப்படுகிறது. அந்தந்த தெய்வத்துக்குரிய உலகம் சாலோக்கியம் எனப்படுகிறது. அங்குச் செல்கின்ற ஜீவர்கள் அடையும் இன்பம் அதிகம்; துன்பம் குறைவு. சூழ்நிலை அந்தப் பாங்கில் அமைந்துள்ளது. மானுடன் ஒருவன் பரலோகத்திற்குப் போனால் மட்டும் போதாது. அதற்கு அதிபதியாயிருக்கும் பரமனை அடிக்கடி தரிசிக்க வேண்டும். அதன் பொருட்டு அவன் சொர்க்கத்தில் பரமனுக்குப் பக்கத்தில் வசித்திருக்க இடம் பெறவேண்டும். அத்தகைய பதவிக்குச் சாமீப்பியம் என்று பெயர். சமீபத்தில் வாழ்ந்திருப்பவன் என அது பொருள் படுகிறது. சான்ருேர்க்குச் சமீபத்தில் வாழ்ந்திருப்பதே மானுடப் பிறவி எடுத்திருப்பவன் அடையக்கூடிய பெரிய பேறுகளுள் மிக முக்கியமானதாகிறது. சொர்க்கத்திற்குச் சென்றிருக்கின்றவன் விரும்பியபோதெல்லாம் தன்னுடைய வழிபடு தெய்வமாகிய பரமனைத் தரிசிக்கும் வாய்ப்பு அமையப் பெற்ருல் சாமீப்பியம் என்னும் பதவியை அவன் பெற்றவனுகின்ருன்.

அடுத்தது சாருப்பியம். அதே வடிவத்தை அடையப் பெற்றிருப்பவன் என்பது அப்பதத்தின் பொருள். இயற்கையில் இதற்குச் சான்றைக் காணலாம். புழுதியில் வாழ்ந்திருக்கும் வெட்டுக்கிளி புழுதியின் நிறத்தை அடையப்பெறுகிறது. மரத்தில் வாழ்ந்திருக்கும் வெட்டுக்கிளி அதன் இலைகளின் நிறமாகிய பச்சை நிறத்தை அடையப்பெறுகிறது. சில வெட்டுக்கிளிகள் மரத்திலிருக்கின்ற இலை போன்றே இறகுகளைப் படைத்திருக்கின்றன. அங்ஙனம் சொர்க்கத்தில் வாழ்ந்திருக்கும் பக்தன் தன் வழிபடு தெய்வத்தின் வடிவத்திலேயே ஊறியிருப்பதால் அந்தத் தெய்வத்தின் ரூபத்தை அவன் எடுத்துக்கொள்கிருன். வைகுண்டவாசிகள் அனைவருக்கும் பாகவதர்கள் என்று பெயர். பகவானுடைய வடிவத்தையே எடுத்திருப்பவர்கள் என அப்பெயர் பொருள்படுகிறது. பக்தர்களும் பகவானும் ஒரே வடிவத்தில் இருப்பவர்களாக ஏனையோருக்குத் தென்படுகிருர்கள். ஆனல் பகவானுக்கும் பக்தர்களுக்கும் உள்ள வேற்றுமையை அவர்கள் தாம் அறிந்துகொள்கிருர்கள். மற்றவர்களுக்கு அவ்வேற்றுமை புலனுகாது. சொர்க்கபதவியை நாடியிருப்பவன் அடைகின்ற பேறுகளுள் உச்சநிலையிலிருப்பது சாருப்பியம்.

அடுத்தபடியாகச் சாயுஜ்ஜியம் என்னும் நிலை தானாக பக்தனுக்கு வந்து வாய்க்கிறது. தன்னுடைய வடிவத்தையும் இயல்பையும் அறவே பரமனுக்குரியவைகளாக்கிப் பரமனில் அவன் இரண்டறக் கலக்கின்றான். அது சாயுஜ்ஜியம் எனப்படுகிறது. இங்ஙனம் மேல் நிலைக்குப் பரிணமித்து வருகின்ற பதவிமுக்தியானது கைவல்ய முக்தியாக மாறுகிறது. சான்று ஒன்றின் மூலம் இதைத் தெளிவுபடுத்தலாம். வானத்தினின்று கீழே வீழ்கின்ற மழைத்துளி நாமமும் ரூபமும் படைத்திருக்கிறது. கடலுக்குள் விழுந்ததும் அது நாம ரூபத்தை இழந்து கடலோடு ஒன்றுபடுகிறது. சாயுஜ்ஜியம் அத்தகையதாம்.

பரமனோடு இரண்டறக் கலந்திருக்கின்ற நிலை அபேதமானது; அது அகண்டமாகவும் அமைகிறது. அத்தகைய உபாதியற்றநிலையைத் தாம் அதிவிரைவில் பெறவேண்டுமென்று தாயுமானவர் இக் கண்ணியில் தெரிவிக்கிறார்.

**10-8. தற்பரத்தின் உள்ளேயும் சாலோகம் ஆதிஎனும்
பொற்பு அறிந்துஆ னந்தம் பொருந்துநாள் [எந்நாளோ**

இக்கண்ணியில் அடங்கியிருக்கிற கருத்தை நவீன முறையில் அமைந்துள்ள கல்வியோடு ஒப்பிட்டு அறிந்துகொள்ளலாம். சர்வகலா சாலையில் கற்கின்றவர்களுக்கு மூன்று படித்தரங்கள் இருக்கின்றன. இன்னும் பட்டம் பெறுதவனுக்கு Under Graduate என்பது பெயர். பட்டத்தின் முதல் பதவி அடையப் பெற்றவன் Graduate என அழைக்கப்பெறுகிறான். உச்சநிலை அடைவதற்கு ஆயத்தப்படுத்திக்கொண்டிருப்பவனுக்கு Post Graduate என்று பெயர். சிறிதளவாவது ஜீவவியக்தி இருக்குமானால் அவன் Under Graduate க்கு நிகராகின்றான். ஆயினும் ஒரு நாளைக்குத் தான் Graduate ஆக முடியும் என்னும் எண்ணத்தினின்று அவன் பிசகுவதில்லை. அதே பாங்கில் பதவி முக்திக்கு வருகின்றவர்கள் சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம் ஆகிய நிலைகளில் பண்பாடு அடைந்து வருவதற்கிடையில் தங்கள் விவேகத்தை இழந்துவிடுவதில்லை. ஜீவவியக்தியில் பற்று வைத்திருக்கிறவர்கள் அவிவேகிகள். பெரும்பாலும் பதவி முக்தியிலேயே அவர்கள் கால மெல்லாம் உழன்றுகிடக்கின்றனர். விவேகத்தில் உச்சநிலை அடைந்திருப்பவர்கள் அதிவிரைவில் ஜீவவியக்தியைத் தாண்டிப் பரத்தில் ஒன்றுபட்டிருக்கும் தகுதி பெறுகின்றனர். அத்தகைய விவேகம் தம்மை விட்டு அகன்று போகலாகாது என்பதைத் தாயுமானவர் இக்கண்ணியில் விண்ணப்பிக்கின்றார்.

**10-9. உள்ளத்தின் உள்ளேதான் ஊறும் சிவானந்த
வெள்ளம் துளைந்து விடாய்தீர்வது எந்நாளோ.**

காட்டில் வசிக்கும் விலங்குகள் விடாய் அல்லது தாகம் உண்டாகின்றபொழுது வனமெங்கும் அலைந்து திரிந்து நீர்நிலையைக் கண்டு பிடிக்கின்றன. வேண்டியவாறு நீர் பருகித் தங்களுடைய விடாயைத் தணித்துக்கொள்கின்றன. அந்த நிலையில் உயிர்களனைத்தும் சிவ ஞானபோதம் என்னும் ஆத்ம சாந்தியைத் தேடி அலைகின்றன; அதை முன்னிட்டு பிறவிகள் பல எடுக்கின்றன. ஒவ்வொரு பிறவியிலும் தங்களுக்குண்டாயுள்ள ஞான வேட்கையை அப்பொழுது பெற்றுள்ள அறிவுக்கேற்ற பிரகாரம் அகற்ற முயன்று வருகின்றன. அம் முயற்சியில் மானுட வடிவெடுத்திருப்பது மிக முன்னேற்றம் அடைந்த நிலையாம். மானுடனாகப் பிறந்துள்ள விவேகி ஒருவன் பல பிறவிகளுக்குப் பிறகு ஓர் உண்மையை அறிய வருகின்றான். பிரபஞ்சப்பொருள்கள் அவனுக்கு உண்டாயிருக்கும் விடாய் அல்லது ஆசையை ஓரளவில் நிவர்த்திபண்ணுகின்றன. ஆனால்நிரந்தரமான நிவர்த்தி பிரபஞ்சப் பொருள் எதிலும் இல்லவே இல்லை. பரஞானத்தை பெற்றுப் பரதத்துவத்தில்திளைத்திருக்கின்றவனுக்கேஞான வேட்கை நிரந்தர நிறைவடைகின்றது. பொருளற்ற பிரபஞ்சப் பொருள்களை நாடி அந்த விவேகிகள் அலைந்து திரிவதில்லை. பரநாட்டத்திலேயே அவர்கள் யாண்டும் கண்ணும் கருத்துமாயிருக்கின்றனர். சகோர பட்சி தொண்டை வறண்டுபோனாலும் பூமியில் படிந்துள்ள நீரைத் தொடுவதில்லை என்பது கோட்பாடு. அதே விதத்தில் பரஞான வேட்கை உண்டாயிருக்கின்ற தீவிரமான ஆத்ம சாதகன் பரத்தைத் தவிர வேறு எதிலும் நாட்டம் கொள்வதில்லை. அப்பர நாட்டம் தமக்கு வந்து வாய்க்க வேண்டும் என்பது தாயுமானவர் கொள்கை. இதை இக்கண்ணி விளக்குகிறது.

# இன்றைக்கு நமக்கு வேண்டுவன

( சுவாமி விவேகானந்தர் )

இன்றைக்கு நமக்கு வேண்டுவது விஞ்ஞானத்தோடு இணைந்த வேதாந்தமாகும். பிரம்மச்சரியம் வாழ்வின் அடிப்படையாக அமைய வேண்டும். சிரத்தையும், தன்னம்பிக்கையும் உடையவர்களாக நாம் இருக்கவேண்டும். சமத்துவ உணர்வும், சுதந்திர உணர்வும், கடமையில் ஆர்வமும், ஆற்றலும் உடையவர்களாக இருப்பதில் மேனாட்டவர்களைக் காட்டிலும் நாம் சிறந்து விளங்கவேண்டும். அதே சமயத்தில் பண்பாட்டிலும், பழக்கவழக்கங்களிலும் நாம் இந்துக்களாகத் திகழ வேண்டும்.

வீண்பேச்சுப் பேசிச் சோம்பலை வளர்த்து வீண்காலம் போக்குவதை அறவே அகற்ற வேண்டும். அதற்குப் பதிலாகக் கீழ்ப்படிந்து பணி செய்தல், பொறாமையை அகற்றுதல், தீவிர விடாமுயற்சி, அசைக்க முடியாத தன்னம்பிக்கை ஆகியவற்றை ஆங்கிலேயர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்வது முற்றிலும் அவசியமாகும். அதிகாரம் செலுத்த விரும்புவதற்கு முன்பு கீழ்ப்படியக் கற்றுக்கொள்ளவேண்டும். கீழ்ப்படிதலையும், பொறாமையின்மையையும் நாம் கற்றுக்கொள்ளும் வரையில் ஒரு வலிமை மிக்க ஸ்தாபனத்தை நாம் உருவாக்க முடியாது. புறவுலகை வெற்றி கொள்வதை ஐரோப்பாவிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அகவுலகை வெற்றி கொள்வதை இந்தியாவிடமிருந்து ஐரோப்பா கற்றுக்கொள்ளவேண்டும். இவ்விரண்டின் இணைப்புத்தான் இன்றைக்கு நமக்குத் தேவை.

தனிப்பட்ட மனிதனோ, ஒரு சமுதாயமோ சீரும் சிறப்பும் அடைவதற்கு மூன்று விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டும். ஒன்று நன்மை தரும் சக்திகளில் உறுதியான நம்பிக்கை வைத்தல். இரண்டு பொறாமையின்மையும், ஐயமின்மையும் கொண்டிருத்தல். மூன்று நல்லவர்களாக இருந்துகொண்டு நலம் செய்பவர்களுக்கு உதவி புரிதல்.

முதலில் நாம் அழுக்காறு என்னும் குற்றத்தை அகற்றுவோம். யாரிடமும் பொறாமை கொள்ளாதீர்கள். நல்ல செயல்களில் ஈடுபடும் ஒவ்வொருவருக்கும் உதவி செய்யுங்கள். மூன்று உலகங்களில் உள்ள உயிர்களுக்கும் உங்கள் நல்ல எண்ணத்தை அனுப்புங்கள். விரிவடைவதும், உலகெங்கும் பரவுவதும், உலகை ஒன்றுபடுத்துவதும் நம்முடைய லக்ஷியங்களாகும். அன்பு, நேர்மை, பொறுமை ஆகியவையே நமக்குத் தேவை. மற்றவை நமக்குத் தேவையில்லை. தைரியத்தோடும், உள்ள வலிமையோடும் கர்மயோகம் செய்வதில் நாம் தீவிரமாக இன்றைக்கு ஈடுபடவேண்டும். அத்தகைய கர்மயோகிகள் தாம் இன்றைக்குத் தேவைப்படுகின்றார்கள்.

நீங்கள் என் வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்து ஏற்றுக் கொள்வீர்களானால் நான் உங்களுக்குக் கூறும் அறிவுரையாவது: "உங்களுடைய அறையின் கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து வையுங்கள். நீங்கள் வாழும் பகுதியில் ஏராளமான ஏழைமக்கள் வாழ்வில் கீழ்நோக்கிச் சென்றுகொண்டும், துன்பப்பட்டுக்கொண்டும் இருக்கிறார்கள். நீங்கள் அவர்களிடம் செல்லவேண்டும். உற்சாகத்துடனும், ஊக்கத்துடனும் அவர்களுக்கு நீங்கள் பணிவிடை செய்யவேண்டும். நோய்வாய்ப்பட்டிருப்பவர்களுக்குத் தேவையான மருந்துகள் தர ஏற்பாடு செய்யுங்கள். அவர்களை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள். பசித்துள்ளவர்களுக்கு உணவும், தொழிலும் கொடுத்து அவர்கள் பசிப்பிணியைப் போக்குங்கள். அறியாமையில் மூழ்கிக் கிடப்பவர்களுக்கு உங்களால் முடிந்தளவு கல்வி அறிவைக் கொடுங்கள். ஆயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் புனித உணர்வு உடையவர்களாய், தெய்வத்தினிடத்து உறுதியான நம்பிக்கை உடையவர்களாய், சிங்கத்தின் தைரியம் உடையவர்களாய், ஏழை எளியவர்களுக்கு உதவவேண்டும் என்ற இதயம் படைத்தவர்களாய் நாடு முழுவதும் சென்று பிரசாரம் செய்யவேண்டும். மக்களிடையே சுதந்திர உணர்வையும், பரோபகாரச் சிந்தனையையும் வளர்க்கவேண்டும். அப்பொழுதுதான் இந்தியா விழித்தெழும்.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-184

*999. शिवशक्त्यैक्य रूपिणी* சிவசக்த்யைக்ய ரூபிணீ—சிவனும் சக்தியும் ஐக்கியமாயுள்ள வடிவத்தை உடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இதற்குச் சான்ருக அமைந்திருப்பது நாம் வசித்துவரும் பிரபஞ்சமேயாம். இதில் எந்தப் பகுதியை ஆராய்ந்து பார்த்தாலும் இந்நாமத்தின் உட்பொருளைத் தெளிவுறக் காணலாம். மக்களாகிய நாம் உச்சரிக்கும் மொழிகள் அனைத்தும், உயிர்கள் அனைத்தும் சிவ சக்தி ஐக்கியத்தின் விளைவாம். உயிர் எழுத்துக்கள் அனைத்தும் சிவ சொரூபமாயுள்ளன. மெய்யெழுத்துக்கள் அனைத்தும் சக்தியின் வடிவத்தில் இருக்கின்றன. உயிர் எழுத்துக்களைப் புருஷ தத்துவம் என்றும் மெய்யெழுத்துக்களைப் பிரகிருதி தத்துவம் என்றும் பகரலாம். உயிருக்குத் தன்னளவில் மதிப்புண்டு. உயிரற்ற உடல் பிணமாகக் கருதப்படுகிறது. ஆகவே பிரகிருதி தத்துவம் தனக்குரிய மதிப்பைப் பெறுதற்பொருட்டுப் புருஷதத்துவத்தைச் சார்ந்திருத்தல் வேண்டும். இது ஓசையைப்பற்றிய கோட்பாடாம். அடுத்தபடியாகப் பிரபஞ்சம் எங்குமுள்ள உயிர்வகைகளை ஆராய்வோம். அவை யாவும் உயிரும் உடலும் உடையவைகளாகவே அமைந்திருக்கின்றன. ஒன்றினின்று மற்றென்றைப் பிரித்தெடுத்தால் பயன் ஒன்றும் இல்லை. உயிரற்ற உடல் வெறும் சவமாகிறது. உடலற்ற உயிர் தன்னைத் தானே விளக்கிக்கொள்ள முடியாது. எனவே, பிரபஞ்சம் எங்குமுள்ள உயிர்கள் யாவும் சிவ சக்தி ஐக்கிய சொருபமாம்.

இனி உயிர்களுக்கிடையில் உச்சநிலை அடைந்திருக்கும் மனிதனை ஆராய்வோம். சிவசக்தி ஐக்கிய சொரூபம் மனிதனிடத்து ஸ்பஷ்டமாக வெளியாகிறது. மனிதனிடத்து அமைந்திருக்கும் ஆத்ம சொருபம் சிவத்தின் கூருகிறது. அவன் படைத்திருக்கும் சரீரம் சக்தியின் கூறு ஆகிறது. ஆகவே அவனுடைய அமைப்பில் சிவமும் சக்தியும் ஒன்று சேர்ந்து அவனுக்குரிய வியக்தியைக் கொடுத்தருள்கின்ருர்கள். மனிதன் படைத்திருக்கும் சரீரத்தில் மூன்று கூறுகள் இருக்கின்றன. அவை முறையே ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் எனப்படுகின்றன. மனிதனுக்கு மரணம் என்பது பயன்படாது பழுதுபட்டுப் போன ஸ்தூல உடலைக் களைதலாம். அதைக் களைந்த பிறகு சூட்சும சரீரத்தையும், காரண சரீரத்தையும் முகாமையாகக்கொண்டு அந்த ஜீவன் தனக்குத் தக்க சந்தர்ப்பம் வாய்க்கின்ற பொழுது மற்ருெரு ஸ்தூல சரீரத்தை எடுத்துக்கொள்கிருன். எனவே, ஜீவாத்மனுக்கு ஜீவ வியக்தி இருக்கும் வரையில் அவன் சிவ சக்தியின் ஐக்கியமாகவே இருந்து வருகிருன். என்றைக்கு மனிதன் மூன்று சரீரங்களையும் தாண்டி அப்பால் செல்கின்ருனே அன்றைக்கு அவன் சுத்த சிவமாகின்ருன். சக்தியின் கூறு அந்நிலையில் சிவத்தில் ஒடுங்குகிறது.

*1000. ललिताम्बिका* லலிதாம்பிகா — அன்னையின் ஆயிரம் திருநாமங்களுள் முதல் நாமமாக வந்தது ஸ்ரீ மாதா என்பதாம். அது லலிதாம்பிகை என முடிவுறுகிறது.

இதில் பெரிய கோட்பாடு ஒன்று அமைந்திருக்கிறது. அண்டகோடிகளனைத்தையும் ஜீவகோடிகளனைத்தையும் சர்வகாலமும் தோற்றுவித்துக்கொண்டிருப்பவள் அன்னை பரதேவதையாம். அப்படி அவை யாவற்றையும் ஆதியந்தமில்லாது தோற்றுவித்துக்கொண்டிருப்பதால் அவள் வெறும் மாதா அல்லள். ஸ்ரீ மாதா என்னும் பெயர் பெறுகின்ருள். அகண்டமாக விரிந்தோடும் ஜகத்தையும் ஜீவகோடிகளையும் தோற்றுவிப்பதில் அவளுக்குச் சிரமம் ஏதும் இல்லை. வெறும் விளையாட்டாக இவை யாவற்றையும் உண்டுபண்ணிக்கொண்டிருக்கின்ருள் அம்பிகை. ஆகையால் லலிதாம்பிகை என்னும் பெயர் அவளுக்கு அமைந்திருப்பது பொருத்தமானது. ஒரு காரியத்தைச் சிரமமில்லாது சாதிப்பது 'அம்மனிதன் அதை லலிதமாகச் செய்துமுடித்துவிட்டான்' என விளக்கப்படுகிறது. பிரபஞ்சத்தில் எங்கெல்லாம் செயல்களில் லலிதத்தைக் காண்கிருேமோ அங்கெல்லாம் அன்னையின் சான்னித்தியம் ஸ்பஷ்டமாக மிளிர்கிறது. மானுடன் ஒருவன் தன் தலையின்மீது ஒரு மணங்கு (80 பவுண்டு) எடையை வைத்துக்

கொண்டு நடந்துபோகிறான். வழியில் சிறுவர்களின் விளையாட்டைப் பார்க்கிறான். தலையில் இருக்கும் எடையை மறந்துவிட்டு அந்த விளையாட்டைச் சிறிதுநேரம் நின்று வேடிக்கை பார்த்துவிட்டுப் போகிறான். அச்செயலைச் செய்கின்றவனைத் தன் காரியத்தை லலிதமாகச் செய்து சாதித்தான் என்று சொல்லுகிறோம். அன்னையின் சக்தி அவனிடம் ஓங்கியிருப்பதே அச்செயலுக்கு முகாமையாம்.

பேசுகின்ற மானுடன் ஒருவன் தங்குத்தடையின்றித் தெளிவாகத் தன் கருத்துக்களை எடுத்து வாரிக்கொட்டிக் கொண்டிருக்கிறான். அத்தகையவனுடைய பேச்சில் லலிதம் ததும்புகிறது. பக்திபூர்வமாகப் பகருங்கால் கலைமகளின் சான்னித்தியம் அவனுடைய நாவில் குடிகொண்டிருக்கிறது எனலாம்.

இனி, கலைகளுள் **Fine Arts**--லலித கலைகள் என்பன சில இருக்கின்றன. ஓவியம், காவியம், இசை, நாட்டியம், சிற்பம் போன்றவைகளை **Fine Arts** அல்லது சிறப்பும் அழகும் நிறைந்த நுண்கலைகள் என்று சிலாகித்துக் கூறுகிறோம். பாடகன் ஒருவன் பாடுகின்றான். அப்படிப்பாடுகின்றபொழுது கண்கள் பிதுங்கிக் கீழே விழும்படி வைத்திருப்பானாகில் அது லலிதகலையாகாது. வாயை விகாரமாகச் சுளித்துக்கொண்டிருந்தாலும் முகத்தை விதவிதமாக நீட்டிக்கொண்டும் திணறிக்கொண்டும் பாடினாலும் அது லலித கலையாகாது. லலிதகலையில் சிறந்த ஒருவன் பாடப்பாட அவனுடைய முகத்தில் சாந்தமும் இனிமையும் சொட்டுகின்றன. வாயைத் திறப்பதும் மூடுவதுமாகிய செயல்கள் இடையிடையே அரிதாகமட்டும் தென்படுகின்றன. அத்தகைய சிறந்த நிலையிலே அவன் நிலைத்திருந்துகொண்டு பாடுவானாகில், அவன் பாடுகின்ற பாடலிலே ராகம், தாளம் முதலியன முறையாக அமைந்திருக்குமாகில், அப்பொழுது அவனுடைய கலை லலித கலை ஆகின்றது. அத்தகைய கலையை ரசிப்பது லலிதாம்பிகையின் வழிபாட்டுக்கு நிகராகிறது.

களிமண்ணை ஒருவன் நன்றாகப் பிசைந்து வைத்திருக்கின்றான். தன் விரல்களைக்கொண்டு பிசைந்த மண்ணில் வடிவத்தை உண்டு பண்ணுகின்றான். அரிதாக அவன் செயல் அமையுமாகில் களிமண்ணினின்று வடிவத்தை வனைவது சிறந்த கலையாகிறது. அத்தகைய வனைச் சிருஷ்டி கர்த்தாவுடன் ஒப்பிடலாம். வடிவத்தை வனைந்தெடுத்தால் மட்டும் போதாது. அவ்வடிவத்தின் முகத்தில் வித விதமான ரஸங்களான கோபாவேசம், கருணை, விசனம், மகிழ்ச்சி, பொறாமை, ஏமாற்றம் முதலிய மெய்ப்பாடுகளுக்கு விளக்கமாக அவன் அமைத்திருக்கும் வடிவம் அமையுமாகில் அன்னவன் படைத்திருப்பது லலித கலையாம்.

சான்றோர் ஒருவர் கல்லினுள்ளே தேவதை மறைந்திருக்கிறது எனச் சொல்கின்றார். மறைந்திருக்கிற தேவதையை வெளிப்படுத்த வல்லவனுக்கு அன்னை பராசக்தியின் அனுக்கிரகம் வாய்த்திருக்கிறது எனலாம். அதாவது பொருத்தமான கற்பாறையினின்றோ சலவைக் கல்லினின்றோ தெய்வீகம் திகழும் அரிய வடிவங்களை அற்புதமாக ஒருவன் செதுக்கி எடுப்பானாகில் அது லலித கலையாகிறது. இனி, காகிதத்தின்மீது ஒருவன் சில கோடுகளை வரைகின்றான். அக்கோடுகளைப் பார்த்தவுடன் இது இந்த மனிதனுடைய வடிவம் என்று மற்றவர்கள் அடையாளம் கண்டுகொள்கிறார்கள். அவன் செயலும் லலித கலையாம். படம் தீட்டும் நிபுணன் ஒருவன் வரையும் இயற்கையின் பாங்கு 'இது சித்திரமா அல்லது இயற்கையின் உண்மைச் சொரூபமா' என்று ஆராய்ச்சிக்காரன் சந்தேகம் கொள்ளுமாறு இருக்குமாயின் அது லலிதகலையாம். நடிக்கின்ற நாடகம் நடிப்பா அல்லது உண்மை நிகழ்ச்சியா என்று கண்டுபிடிக்க முடியாத வண்ணம் நடிப்பவன் லலிதகலை படைத்தவனாகிறான். நடனத்தின்போது உடல் அசைவின் வாயிலாக அரிய பெரிய கருத்துக்கள் வெளியாகின்றன. உடல் அசைவில் உணர்ச்சிததும்பும் பாங்குகள் பொலிகின்றன. அத்தகைய நடனம் அற்புதமான லலிதகலையாம். சிவதாண்டவமே அதற்கு அத்தாட்சியாகிறது. இனி, அன்னையின் திருநடனம் இயற்கையின் நடைமுறைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு ஆகிறது.

அன்னை பராசக்தி அண்டங்களை உண்டுபண்ணுவதில், நிலைத்திருக்கச் செய்வதில், ஒடுக்குவதில் தன் திறமை யாவற்றையும் விளையாட்டுப் போன்று செய்து சாதிக்கிறாள். ஆகையால் அவளை லலிதாம்பிகை எனப் போற்றுகிறோம்.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (381) சிவனுக்கு வில்வம், திருமாலுக்குத் துளசி, கணபதிக்கு அறுகம்புல் சிறப்புடையனவாகக் கருதப்படுகின்றன. இதன் கருத்து என்ன?

இவை மூன்றும் ஓஷதிகள் எனக் கருதப்படுகின்றன. எது ஔஷதத்துக்குப் பயன்படுகிறதோ அது ஓஷதியாகிறது. ஔஷதம் என்பது மருந்து. அது நோயை நீக்கவல்லது. இயற்கையில் அமைந்துள்ள பொருள்களுக்கிடையில், சிறப்பாக ஸ்தாவரங்களுக்கிடையில் மருந்துக்குரிய செடி, கொடி, வேர் வகைகள் ஏராளமாய் இருக்கின்றன. ஆராய்ச்சியின் வாயிலாகவும் ஞானக் கண்கொண்டும் இவைகளிடத்துள்ள சிறப்புக்களை ஆன்றோர்கள் கண்டறிந்தார்கள். அப்படிக் கண்டறிந்துள்ள ஓஷதிகளுள் வில்வம், துளசி, அறுகு ஆகியமூன்றும் முக்கியமான இடம் பெற்றுள்ளன. ஆதலால் அவைகளை முறையே சிவனுக்கும் திருமாலுக்கும் கணபதிக்கும் பிரியமானவைகள் என ஆன்றோர் கற்பித்தனர். 'பக்தி பூர்வமாக இவைகளை உட்கொள்வதால் நோய்கள் பல தவிர்க்கப்படுகின்றன. இறைவனருளால் நோய் தடுக்கப்பட்டது' என்று பொதுமக்கள் பொருள்படுத்துகின்றனர். எனவே இவைகளைத் தெய்வத்துக்குப் பிரியமானவைகள் என்னும் கொள்கையைப் பரப்புவதன் வாயிலாக மக்களுக்கு இரண்டு நலன்கள் வந்தமைகின்றன. எந்த விதத்திலும் பக்தியை வளர்ப்பதும் நோயைத் தவிர்ப்பதும் நல்ல ஆருயிர்ப் பணிவிடைகளாகின்றன. அந்த முறையில் இவை மூன்றையும் பக்தி பூர்வமாகப் பாதுகாத்து வைப்பதும், பரமனுக்குப் படைப்பதும், பிறகு பக்தி விசுவாசத்துடன் அவைகளை உட்கொள்வதும் நல்ல செயல்களாம். நலன் தரும் அனைத்தையும் கடவுள் பக்தியோடு இணைத்து வைத்துள்ளார்கள் நம் பழங்காலத்து அறிஞர்கள்.

கேள்வி: (382) சிற்றுயிர் பேருயிராக மாறுகின்றது என்பதை விளக்க வேண்டுகிறோம்.

சிற்றுயிர்கள் பேருயிர்களாக மாறியமையும் செயலைப் பரிணமவாதம் என்கிறோம் (Theory of Evolution). இயற்கையைச் சரியாக ஆராய்ந்து பார்த்தால் இவ்வுண்மை வெளிப்படையாகிறது. உயிரற்ற ஜடப்பொருள் உயிருள்ள ஜடப்பொருளாக மாறியமைவது இயற்கையின் பாங்காகும். உயிரற்ற ஜடப்பொருளை Inorganic Matter—ஜடம் எனப் பாகுபடுத்துகின்றோம். உயிருற்றதை Organic Matter—உயிருள்ளது எனப் பொருள்படுத்துகிறோம். இயற்கையின் திட்டம் ஏதேனும் ஓர் உயிரைப் புசித்து முன்னேற்றமடைவதாம். முன்னேற்றம் அடைய அடைய உடலமைப்பிலும் முன்னேற்றம் உண்டாகிறது. புழுப்பூச்சிகளில் சில எலும்பற்றவையாய் இருக்கின்றன. படிப்படியாக மேல்நிலைக்கு வரவர அவைகள் எலும்பைப் பெறுகின்றன. சிற்றுயிர்களுக்குக் கால்கள் அதிகம். பேருயிராக அவைகள் பரிணமிக்கின்றபொழுது கால்களின் எண்ணிக்கை குறைகின்றது. கடைசியாக நான்கு கால்களுடையவைகள் விலங்குகள் எனப் பகரப்பெறுகின்றன. இரண்டு கால்களும், இரண்டு இறகுகளும் உடையவைகள் பறவைகள் எனப் பகரப் பெறுகின்றன. சிறகுகளுக்குப் பதிலாக முன்னங்கால்கள் இரண்டும் கால்களாகவும் கைகளாகவும் பயன்படக் கூடியவை கிட்டத்தட்ட மனிதனுடைய நிலையை எட்டுகின்றன. வானரம் என்ற சொல் நரன் வா—இது மனிதனை எனப் பொருள்படுகிறது. இங்ஙனம் உயிர் வகைகள் மேல் நிலைக்கு வரவரச் சரீர அமைப்பிலும், உணவைப் புசிக்கும் விதத்திலும், அறிவுத்திறனிலும் முன்னேற்றம் அடைந்து வருவதைக் காண்கிறோம்.

இனி, மனிதனை வந்துள்ள உயிர்களுள் ஒரு தனிச் சிறப்பு உண்டு. ஜடத்தினின்று சேதனமாக மாறி உயர்நிலை எட்டுகின்ற உயிர்வகைகள் எத்தனை உண்டோ அத்தனை பாங்குடையவர்களை மனிதர்களுக்கிடையிலே காணலாம். கல் போன்ற மனிதர், புழுப்பூச்சி போன்ற மனிதர், கொடிய இயல்புடையவர், நல்லியல்புடையவர், இவன் மானுடனே, தேவனே என்று ஆராய்ந்து பார்ப்பதற்கு ஏற்ற பண்புடையவன் ஆகிய இத்தனைவிதமான உயிர் வகைகளையும் மானுட ஜாதியில் காணலாம். மனிதன் ஒருவன் தன் முயற்சியால் ஒரே ஜென்மத்தில் மிகக் கீழ்நிலையிலிருந்து மிக மேல் நிலைக்கு வருவதற்கும் சான்றி

ளைக் காணலாம். ஆக, இக்கோட்பாடுகளை யெல்லாம் ஒன்றுசேர்த்து ஆராய்ந்து பார்த்தால் சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிப்பது இயற்கையின் திட்டம் என்பது வெளியாகிறது.

கேள்வி: (383) 'ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி,' 'ஹரி ஓம் தத் ஸத்' இவற்றின் உட்பொருள் என்ன?

பெரும்பாலும் சாந்தி, சாந்தி, சாந்தி என்று முடிவுறுகின்ற வேத வாக்குகளுக்கும் ஆன்றோருடைய சொற்களுக்கும் சாந்திபாடம் என்னும் பெயர் வழங்கப்படுகிறது. சதா சஞ்சலப்பட்டுக்கொண்டிருப்பது மனதின் பாங்கு. அது அக்ஞானத்தின் விளைவு.அக்ஞானம் அதிகரிக்கின்ற அளவு மனதின் சலனமும் அதிக வேகம் பெறுகின்றது. அதற்கு நேர்மாருக நல்லறிவைப் பெறுதற்கேற்ப மன அமைதி உண்டாகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்ளலாம். தாயைப் பிரிந்துள்ள குழந்தை ஒன்று தாயைக் காணவேண்டும் என்று கதறிப்பதறி அழுகிறது. வெளியூருக்குச் சென்றுள்ள தாய் அதிவிரைவில் திரும்பி வந்துகொண்டிருக்கின்ருள்; இன்னும் அரை மணி நேரத்தில் இங்கே வந்து சேர்வாள் என்னும் கருத்தை அந்தக் குழந்தைக்கு ஊட்டினுல் அதற்கேற்றவாறு அதன் அக்ஞானம் அகன்று போகிறது; ஞானம் உருவெடுக்கிறது. குழந்தையும் அந்த நம்பிக்கையுடன் அமைதியுற்றிருக்கின்றது. இதே விதத்தில் சாந்திபாடம் ஒவ்வொன்றையும் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தால் அதில் அடங்கியிருக்கும் கருத்து மனக்கொதிப்பை அடக்கவும், அமைதியை வளர்க்கவும் வல்லதாகிறது என்று தெரியும். இங்ஙனம் ஒவ்வொரு சாந்திபாடத்தையும் ஆராய்ந்து பார்த்தால் ஞானத்தெளிவு உண்டாவதைக் காணலாம். சாந்தி என்னும் சொல்லை மூன்று தடவை உச்சரிப்பதில் பொருள் ஒன்று உண்டு. திரிகரணங்களாகிய மனம், மொழி, மெய் மூன்றுக்கும் அமைதி உண்டுபண்ண வல்லது சாந்தி பாடம். கனவு, நனவு, கனவற்ற உறக்கம் ஆகிய மூன்றிலும் அமைதியை வழங்கவல்லது சாந்தி பாடம். இறந்த காலம், நிகழ்காலம், எதிர் காலம் ஆகிய காலத்திரயத்தில் அமைதி தர வல்லது சாந்தி பாடம். இதை முன்னிட்டே அது மூன்று தடவை பகரப் பெறுகிறது.

'ஹரி ஓம் தத் ஸத்' என்பதில் சீரிய கருத்தொன்று அடங்கியிருக்கின்றது. ஹரி அல்லது ஹரன் என்பது மெய்ப்பொருளுக்கு அமைந்துள்ள பெயராம். அது அக்ஞான இருளை அகற்றவல்லது எனப் பொருள்படுகிறது. அப்பொருளையே ஓசை வடிவமாகக் கருதுவோமானுல் அது ஓங்காரம் எனப் பொருள்படுகிறது. ஓசை வடிவத்திலும் சொரூப அமைப்பிலும் எப்பொருள் ஞான விளக்கேற்ற வல்லதாயிருக்கிறதோ அதுவே மெய்ப்பொருள். தத்ஸத் என்பது 'அது மெய்ப்பொருள்' எனப் பொருள்படுகிறது. ஆக, ஹரி ஓம் தத் ஸத் என்று சொல்கிறவிடத்து மெய்ப்பொருள் யாண்டும் அழிவற்றது; அதுவே சத்தியமாகிறது; சத்தியம் என்றும் அழிந்து பட்டுப்போவதன்று என்று பொருள்படுகிறது.

கேள்வி : (384) கடவுளின் கைகளில் ஆயுதம் இருப்பதன் கருத்து யாது?

கடவுளின் மகிமைகள் எண்ணிக்கையிலடங்காதவைகள். அங்ஙனம் கணக்கற்ற மகிமைகளுள் ஒவ்வொரு தெய்வத்திடத்தும் சில மகிமைகள் முன்னிலையில் வந்து நிற்கின்றன. கணபதிக்கு விக்னேஸ்வரன் என்பது பெயர். அவனை வழுத்துகின்ற உயிர்வகைகளுக்கு உண்டாகின்ற விக்கினங்களைத் தடுப்பது அவனுடைய சிறந்த செயல். அவனுக்கு ஆயுதமாக அமைந்திருப்பவைகள் அங்குசமும் பாசமுமாம். நல்லதைக் கடைப்பிடிக்கும்படி அவன் தூண்டுகிருன். நல்லதில் பாசம் வை எனும் செய்தியை அதன் மூலம் உயிர்களுக்கு வழங்குகிருன். மாவுத்தன் யானையை நடாத்துவதற்கு அங்குசத்தைக் கையாள்கின்ருன். அதே விதத்தில் கணபதி அங்குசத்தைக் கையாண்டு உயிர்கள் கெட்ட வழியில் செல்லாதும் நல்வழியில் செல்லும்படியும் தூண்டுகிருன். தெய்வம் ஒன்று; அந்த ஒரு பொருள் இந்தச் சிறந்த செயலைச் செய்கின்றவிடத்து அவனுக்கு விக்னேஸ்வரன் என்று பெயர் வருகின்றது. நெற்றிக்கண்ணுல் சிவனுர் காமத்தை எரித்தார். தட்சிணுமூர்த்திக்கோ மௌனமும், சின் முத்திரையுமே ஆயுதங்கள். இங்ஙனம் ஒவ்வொரு தெய்வமும் படைத்துள்ள ஆயுதத்தின் மூலமாக அவருடைய தனிச்சிறப்பு வெளியாகிறது.

# சமயமும் அதன் அனுஷ்டான முறையும்

( சகோதரி நிவேதிதை )

( சேலம் சகோதரி தங்கம் தமிழில் மொழி பெயர்த்தது )

ஒவ்வொரு மதத்திற்கும் ஓர் அடிப்படைக் கோட்பாடு உண்டு. புராதன எகிப்தின் மதம் மரணத்தை அடிப்படையாகக் கொண்டது. பாரசீக நாட்டின் மதம் வாழ்வில் உள்ள 'நலம் கேடு' என்னும் மர்மத்தைச் சுற்றி அமைந்துள்ளது. கிறிஸ்தவ மதத்தின் கோட்பாடோ அலாதியானது. அவதாரமூர்த்தி ஒருவருடைய பேரன்பு உயிர்களை உய்விக்கிறது என்பது அவர்கள் கொள்கை. இனி இந்துமதத்தின் சிறப்பு இகபரம் இரண்டிலும் நலன் பெற ஏற்ற வாழ்க்கைப் பயிற்சி தருவது ஆகும். பண்பாட்டில் முதிர்ந்தவர்களுக்கு முக்தியை லட்சியமாகவும், வைராக்யத்தை மார்க்கமாகவும் இந்து மதம் போதிக்கிறது. ஆனால் பண்பாட்டில் இன்னும் மேல் நிலையை எட்டாதவர்களுக்கு அவர்கள் இருக்கும் இடத்திலிருந்து முன்னேற வழிகாட்டித் தருகின்றது. இவ்வாறு வாழ்க்கையின் எல்லாப் படித்தரங்களிலும் உள்ள மக்களுக்கு ஏற்ற மார்க்கங்களை வகுத்து வைத்திருக்கின்றது இந்து மதம்.

தான் தொடர்புகொள்ள நேரும் ஒவ்வொரு சமயக் கொள்கையையும் தன்மயமாக்கிக் கொள்வதே இந்து மதத்தின் தனிச்சிறப்பு ஆகும். நாம் உண்ணும் உணவு ஜீரணம் செய்யப்பட்டு நம்மயமாகின்றது. அது போன்று இந்து மதம் புதிய சமயக்கருத்துக்களை ஏற்றுத் தன்மயமாக்குகிறது. உண்ட உணவு ஜீரணம் ஆகும் போது தன் பழைய வடிவத்தை இழந்துவிடுகிறது. ஆனால் அது பயன்படும் புதிய சத்துப் பொருளாக மாறிவிடுகிறது. அவ்வாறே இந்து மதமும் புதிய சமயக்கருத்துக்களை அப்படியே வைத்துக்கொள்ளாமல், அடிப்படையான வேதாந்த தத்துவங்களுக்கு ஒத்தவாறு மாற்றியமைத்து ஏற்றுக்கொள்கிறது. எனவே புதியனவற்றை வரவேற்கும் பரந்த தன்மை பெற்றிருப்பதற்கு இடையில், பழமையின் சிறப்பையும் இழந்துவிடாமல் இந்து மதம் போற்றி வருகிறது. இது மனித வரலாற்றில் வேறெங்கும் காணாத திகைக்கச் செய்கிற உண்மையாகும்.

இந்து மதத்தின் இந்தத் தனிச்சிறப்பு செயல்பட வேண்டிய அவசியம் இப்போது மீண்டும் ஏற்பட்டிருக்கிறது. கிரஹஸ்தர்களுக்கும் சந்நியாசிகளைப் போலவே முக்திதான் வாழ்வின் குறிக்கோளாக இருக்கிறது என்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன. ஆனால் 'இவ்வுலக வாழ்வு போதும், பாரமார்த்திகப் பெருநிலை எங்களுக்கு வேண்டாம்' என்று நினைப்பவர்களுக்கும் ஊக்கம் அளிக்கும் வகையில் சமயபோதனை அளிக்கப்படவேண்டும். 'அறம், பொருள், இன்பம், வீடு' என்ற நான்கு புருஷார்த்தங்களில், வீடுபேற்றில் கருத்தைச் செலுத்தவிரும்பாதவர்க்குப் 'பொருளையும் இன்பத்தையும் வேண்டிய அளவு பெறலாம்; ஆனால் அறவழியில் சென்றே அவற்றை ஈட்டவேண்டும்' என்று வலியுறுத்த வேண்டும். துறவின் விளைவாக வரும் தூய்மையைப் போற்றுவது போன்று, தர்மத்தைக்கடைப்பிடிப்பதன் சிறப்பையும் அங்கீகரிக்க வேண்டும். தனக்கு ஏற்பட்ட கடமையை ஒழுங்காக ஆற்றுவதுதான் தர்மத்தைக் கடைப்பிடிப்பது ஆகும். இனி துறவியர்பால் திகழும் தூய்மையோ தியாகத்தின் விளைவாக வருவது. உண்மையான சந்நியாசி ஒருவருக்குப் பின்னணியாகக் கடமை உணர்வு மிக்க குடிமக்கள் பலர் தேவை. உண்மை இப்படி இருப்பதால், சந்நியாச தர்மத்தை வரையறுத்துச் சொல்லியிருப்பது போல கிரஹஸ்த ஆச்ரமத்தின் சிறப்பையும் கடமைகளையும் தெளிவுபடுத்தும் கொள்கைகளை வற்புறுத்துவது அவசியமாகிறது.

உண்மையாகப் பார்க்கப் போனால் சந்நியாச தர்மத்தைச் சிறப்பிப்பதற்காகக் கிரஹஸ்தாச்ரமத்தைச் சிறப்பற்றதாகக் காட்டவேண்டிய அவசியம் இல்லை. இரண்டு ஆச்ரமங்களுக்கும் ஏற்பட்ட பொதுவான இலட்சியம் எப்போதும் உயர்ந்ததாகவும், தெய்விகம் வாய்ந்ததாகவுமே இருக்கிறது. அறநெறியைச் சார்ந்திருப்பதால் பண்பாட்டில் உயர்ந்த சமுதாயமே சிறந்த அருளாளர்களை உருவாக்குகிறது. தூய்மை வாய்க்கப்பெற்ற தாய் தந்தையரிடத்

துத் தான் சான்றோர்கள் பிறப்பெடுக்கிறார்கள். புலன்களை அடக்கி ஆளாமல் விருப்பம்போல் திரியவிடும் சிற்றின்பம் சேர்வோரிடத்து சான்றோர்கள் பிறப்பதில்லை. நல்ல குடிமக்கள் ஒரு சமுதாயத்தில் இருந்தால்தான் சீரிய குறிக்கோளை நிறைவேற்றும் சந்நியாசத்தைப் போற்றிப் பாதுகாக்கமுடியும். சந்நியாசத்தின் உச்ச நிலையை வெளிப்படுத்த எந்த அளவிற்குத் துறவி அவசியமோ அந்த அளவிற்குக் கடமை தவறாக் குடிமகனும் அவசியம் ஆகிறான்.

நம் பழையசாஸ்திரங்களை ஒரு புதிய நோக்கோடு ஆராயவேண்டியது அவசியமாகிறது. இம்மைக்குரிய செயல்களையும் ஆண்மையோடு ஆற்ற ஊக்கமளிக்கின்ற கருத்துக்களையும் நாம் கண்டுபிடிக்கவேண்டும். கர்மத்தை நீத்தலைப் போலவே கடமையை மேற்கொள்ளலும் உண்மையான துறவினை அளிக்கவல்லது. இதைச் சொல்வதற்கு ஆயிரமாயிரம் சாஸ்திரங்கள் உண்டு. ஆனால் சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட இந்த உண்மையை எல்லாரும் உணர்ந்து ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. சந்நியாச ஆச்ரமமே எல்லா ஆச்ரமங்களிலும் சிறந்தது என்ற கருத்தானது கிரஹஸ்தாச்ரமத்தின் சிறப்பைப் புறக்கணிப்பதில் கொண்டுபோய் விட்டிருக்கிறது. தற்போதைய இந்த நிலையின் காரணம் என்ன? நம்முடைய சாஸ்திரங்கள் வகுக்கப்பட்ட நாட்களில் நம்நாடு பொருட்செல்வத்தைப் போலவே அருட்செல்வத்திலும் செழிப்பு மிக்கதாய் இருந்தது. எனவே தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் அப்பாற்பட்ட முக்தியை வலியுறுத்தினார்கள். ஆனால் பொருட்செல்வம் நம்மை விட்டு நீங்கும்போது அருட்செல்வம் கீழ்மையுறுவதைத் தவிர்க்கமுடியாது. இன்று நம் கடமை என்னவென்றால் இவ்விருவகைச் செல்வத்தையும் மீண்டும் ஒரு சேரப் பிடித்து வருதலேயாம்.

இதை நிறைவேற்றத் தனக்கு ஏற்பட்ட கடமையை நன்கு ஆற்றுவதன் சிறப்பை வலியுறுத்தவேண்டும். இவ்வுலகினை ஒரு கல்விச் சாலையாகக் கருதவேண்டும். ஆங்கு ஒருவகுப்பிலிருந்து மற்றொரு வகுப்பிற்கு உயர்த்தப்பட முயல்வதும் போற்றுதற்குரியதே என்று உணர்த்த வேண்டும். இவ்வுலகப் பொருள்களைக்கொண்டு வரையறை அற்ற பரிபூரணத்தை அடைவது என்பது சாத்தியமில்லை என்று நம் சாஸ்திரங்கள் பகர்கின்றன. உண்மைதான். ஆனால் ஒரு வரம்புக்கு உட்பட்ட நிலையில் நாம் இயங்கி வந்தாலும் நம்முடைய முயற்சியில் நாம் எடுத்து வைக்கும் அடுத்த அடியிலேயே முழுமை அடையப் பெறுவோம் என்ற திடமான நம்பிக்கையுடன் செயலாற்ற வேண்டும்.

எனவே இம்மைக்குரிய செயல்களையே பரத்திற்குரிய பெரு நாட்டமாகக் கொள்வோம். எந்தச் செயலைச் செய்தாலும் முழுத்திறமையுடன் செய்து சாதிக்கவேண்டும். ஏனென்றால் 'செய்வன திருந்தச் செய்' என்பது கோட்பாடு. எவ்வளவு கடினமானதாயினும் உயர்ந்ததும் சிறந்ததுமே நம்முடைய லட்சியமாக இருக்கட்டும். ஒரு சந்நியாசிக்கு இருப்பதைப் போன்ற உரமும், மன வலிமையும், ஒரு கொல்லனையும் செயலில் ஊக்குவிக்கட்டும். அதுவே அன்னை பராசக்தியின் திட்டத்தை நிறைவேற்றும்.

இழிந்தோர் நட்பை எவனும் நாடாதிருப்பானாக. துறவியோ குடிமகனோ யாராயினும் விழுமிய பண்புடையானாகுக. பார்ப்பானோ பறையனோ ஒருவன் சுயமரியாதை உள்ளவன் ஆகுக. அத்தகைய சுயமரியாதையையே மற்றவர்களிடத்தும் எதிர்பார்ப்பவன் ஆகுக. தன்மானம் மிகுந்திருக்க வேண்டிய மக்களை மாக்களாக இழிவுபடுத்தக் கூடாது.

நம் பண்பாட்டைப் பொறுத்தவரையிலும், வணிகனின் நேர்மையும், சந்நியாசியின் துறவினைப் போன்று ஏற்றம் உடையதே. ஏனெனில் நேர்மையான மனிதர்கள் இல்லாது போய் விடுவார்களாயின் இங்கு மடங்களும், உண்மை சந்நியாசிகளும், அவர்களின் சங்கங்களும் மறைந்துபட்டுப் போகும்!

இப்பிரபஞ்ச சம்பந்தமான வாழ்வின் சிறப்பிற்கும் வளர்ச்சிக்கும் உற்ற சக்தியை தன்னுள்ளேயே கண்டு கொண்டு அதைப் பயன்படுத்தவேண்டும். அப்போதுதான் சமுதாயத்திற்கு அப்பாற்பட்ட ஆன்மீக வாழ்விற்கும், சமுதாய வாழ்விற்கும் இடையே உள்ள உண்மையான தொடர்பினை அறிந்துகொள்ள இயலும்.

# பயன் கருதாப் பணிவிடை

(சுவாமி விவேகானந்தரின் கருத்தை சேலம் ஸ்ரீ சாரதா கல்லூரிக் கணிதப் பேராசிரியை திருமதி மங்கையர்க்கரசி தமிழில் மொழி பெயர்த்தது.)

முதன் முதலில் கீதை உபதேசிக்கப்பட்ட காலத்தில் இருபிரிவினரிடையே பெரிய கருத்து வேறுபாடு இருந்தது. சமயம் என்பது வேத விதிப்படி யாகங்கள் செய்வதும் உயிர்ப் பலியிடுதல் போன்ற கர்மங்களைச் செய்வதும்தான் என்று ஒரு பிரிவினர் கருதினர். மற்றொரு பிரிவினர் எண்ணற்ற உயிர்களைப் பலியிடுதல் சமயமாகாது என்று வாதித்தனர். இவர்களில் பெரும்பான்மையோர் துறவிகளும் ஞான மார்க்கத்தைப் பின்பற்றுபவர்களுமேயாவர். இவர்கள் மோட்சத்தை அடையும் ஒரே வழி கர்மத்தைத் துறந்து, ஆத்ம ஞானத்தைப் பெறுவதே என்று நம்பினர்கள். பயன் கருதாப் பணி என்ற சீரிய தத்துவத்தை உபதேசித்துக் கீதாசாரியன் இந்த இரண்டு பிரிவினருக்குமிடையே இருந்த கருத்து வேறுபாட்டைச் சமரசப்படுத்தினர்.

மகாபாரத காலத்தில் கீதை எழுதப்பட்டதன்று; அது பின்னல் இணைக்கப்பட்டது என்று பலர் கருதுகின்றனர். ஆனல் அது சரியன்று. மகாபாரதத்தின் ஒவ்வொரு பகுதியிலும் கீதையில் பிரதானமாகச் சொல்லப்பட்டிருக்கும் உபதேசங்களைக் காணலாம். கீதை மகாபாரதத்தின் ஒரு பகுதியன்று என்று விலக்கப்படவேண்டுமானல் கீதா உபதேசத்தைக் கூறும் மற்ற எல்லாப் பகுதிகளும் கூட மகாபாரதத்திலிருந்து விலக்கப்படவேண்டும்.

பயன் கருதாப் பணிவிடை என்பதின் பொருள் என்ன? இன்பதுன்பங்கள் மனத்தைத் தொடாவண்ணம் கர்மங்களைச் செய்வதே பயன் கருதாப் பணிவிடை என்று பலர் கருதுகின்றனர். இதுதான் இதன் உண்மையான பொருளாக இருப்பின், மிருகங்கள் பயன் கருதாப் பணி செய்கின்றன என்று கூறலாம். சில மிருகங்கள் தங்கள் குட்டிகளை விழுங்கி விடுகின்றன. அதைக் குறித்து அவைகள் வேதனைப்படுவதில்லை. கொள்ளைக்காரர்கள் மற்றவர்களிடமிருந்து கொள்ளையடிக்கின்றனர். இச்செயல் அவர்களுக்கு இன்பத்தையோ துன்பத்தையோ கொடுக்காமல் இருப்பின் அவர்களும் பயன் கருதாப் பணிவிடை செய்கின்றனர். கல்நெஞ்சர்களும் துரோகிகளும் பயன் கருதாப் பணிவிடை செய்கிறவர்கள் ஆகிறார்கள். சுவருக்கு இன்பதுன்ப உணர்வு இல்லை; கல்லுக்கும் இல்லை; அப்படியானல் இவைகளும் பயன் கருதாப்பணி செய்கின்றனவா? பயன் கருதாப் பணியை இவ்வாறு பொருட்படுத்தினல் பயங்கரமான ஒரு தத்துவம் கீதை வாயிலாக உபதேசிக்கப்பட்டதாகவே கருதப்படவேண்டும். ஆனல் இதன் பொருள் இது வன்று. கீதா உபதேசத்தில் சம்பந்தப்பட்டவர்கள் வாழ்க்கையை ஆராய்வோமானல் அவர்கள் வாழ்க்கை இந்த அர்த்தமற்ற வாதத்தினின்றும் முற்றிலும் மாறுபட்டதாக இருக்கிறது. யுத்தத்தில் அர்ச்சுனன் பீஷ்மரையும் துரோணரையும் தோற்கடித்தான். அத்துடன் தன்னுடைய சுயநலத்தை, ஆசைகளை, கீழ்மையை அறவே ஒதுக்கித் தள்ளினன்.

கீதை கர்மயோகத்தைப் போதிக்கிறது. தன்னையே மறக்குமளவு கர்மத்தை ஊன்றிச் செய்தல்வேண்டும். ஒருவன் மன ஒருமைப்பாட்டுடன் கர்மத்தைச் செய்யும்பொழுது "நான் இதைச் செய்கிறேன். அதைச் செய்கிறேன்'' என்ற உணர்வு இருப்பதில்லை. நான் என்ற உணர்வு இல்லாவிட்டால் எப்படிக் கர்மத்தைச் செய்யமுடியும் என்று எண்ணலாம். மன ஒருமைப்பாட்டுடன் தான் என்பதையே மறந்து செய்யும் கர்மம் மிக உன்னதமாக அமைவதை ஒவ்வொருவரும் அவரவர் வாழ்வில் அனுபவித்திருக்கிறோம். உணவை ஜீரணிப்பது முதலிய பல கர்மங்களைச் சுய உணர்வின்றிச் செய்கிறோம். பல கர்மங்களை உணர்வுடனும், சில கர்மங்களைத்தான் என்ற உணர்வின்றி சமாதியில் மூழ்கியதைப் போலவும் செய்கிறோம். ஓவியன் தன்னை மறந்து பரிபூரணமாக ஓவியத்துடன் ஒன்றிவிடும்பொழுது மிக உன்னதமான ஓவியத்தைத் தீட்டுகிறான். சிறந்த சமையல்காரனும் சமையல் செய்யும் பொழுது தான் கையாளும் சமையலுக்குரிய

உணவுப் பதார்த்தங்களைத் தவிர மற்ற எல்லா வற்றையும் மறந்துவிடுகிருன். தங்களுக்குப் பழக்கப்பட்ட ஒரு வேலையை மட்டும்தான் இவர்கள் சீரிய முறையில் செய்கின்றனர். கீதை எல்லாக் கர்மங்களையும் மன ஒருமைப் பாட்டுடன் சீரிய முறையில் செய்யவேண்டும் என்று உபதேசிக்கிறது. தியானப் பயிற்சி யினல் இறைவனிடம் ஒன்றிய ஒருவன் தன்னுடைய கர்மங்கள் எல்லாவற்றையும் ஒருமையுள்ளத்துடன் எந்தவிதப் பலாபலனை யும் எதிர் பார்க்காமல் செய்கிருன். அப்படிக் கர்மம் செய்யும்பொழுது அதனுல் உலகு அடைவது நன்மையேயன்றித் தீமையன்று. இப்படிக் கர்மம் செய்பவர்கள் தங்களுக்காக எதையும் செய்வதில்லை.

ஒவ்வொரு கர்மத்திலும் நலம், கேடு இரண் டும் கலந்தே இருக்கின்றன. சிறிதளவுகூடக் கேடு சேராத நல்ல கர்மங்களே இல்லை.தீயைச் சுற்றிப் புகை இருப்பதுபோன்று கர்மத்துடன் சில கேடுகள் சேர்ந்து இருக்கின்றன.எந்தக் கர் மத்தில் அதிக நலமும், சிறிதளவு கேடும் உள் ளதோ அத்தகைய கர்மத்தைச் செய்ய வேண் டும். அர்ச்சுனன் பீஷ்மரையும் துரோணரையும் தோற்கடிக்காமல் இருந்தால் துரியோதனனை வென்றிருக்க முடியாது. தீய சக்தி நல்ல சக்தி களைத் தோற்கடித்திருக்குமானல் நாட்டிற்குப் பேராபத்து ஏற்பட்டிருக்கும். கொடுங்கோலர் வசம் நாடு சிக்கி மக்களுக்கு இன்னலைக் கொடுத்திருக்கும். கிருஷ்ணன், கம்சன், ஜராசந் தன் போன்ற கொடுங்கோலரைக் கொன்ருர். ஆனல் அவருடைய செயல்கள் அனைத்தும் மற் றவர்களின்நலத்திற்காகச் செய்தனவேயன்றித் தனக்காகச் செய்ததல்ல. தீப வெளிச்சத்தில் கீதை படிக்கிறோம். ஆனல் அப்பொழுது கணக்கற்ற பூச்சிகள் வெளிச்சத்தில் விழுந்து மடிகின்றன. அதனுல் கர்மத்தில் சிறிதளவு கேடு ஒட்டியே இருக்கும் எனத் தெரிகிறது. கர்மத்தைத் தான் என்ற உணர்வின்றிச் செய் பவர்கள் கேட்டினல் பாதிக்கப்படுவதில்லை. ஏனென்ருல் அவர்கள் உலக நன்மைக்காகவே கர்மம் செய்கின்றனர். பயன் கருதாமலும் பற்றற்றும் கர்மம் செய்வதால் பேரானந்த மும் முக்தியும் கிடைக்கின்றன. ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் இங்ஙனம் கர்ம யோகத்தின் இரகசியத்தை உபதேசித்துள் ளார்.

## ஈசுவரார்ப்பணம்

ஒரு சமயம் யமுனை நதிக்கரையில் வியாசர் அமர்ந்திருந்தார். யமுனையில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. ஓடக்காரன் யாரும் ஆங்கில்லை. மாலை நேரம் வந்து விட்டது. கோபிமார்கள் தங்களிடமுள்ள பால், தயிர், வெண்ணெய் முதலானவற்றை விற்ப தற்காக யமுனை நதியைக் கடந்து கிராமங்களுக்குச் சென்றிருந்தார்கள். விற்பனை முடிந்ததும் தங்கள் வீடுகளுக்குத் திரும்புவதற்காக யமுனை நதிக்கரைக்கு வந்தார்கள். யமுனை நதியைக் கடப்பதற்கு ஓடக்காரன் யாரும் ஆங்கு இல்லாதிருந்ததைப் பார்த்துக் கவலைக்குள்ளானர்கள். தாங்கள் யமுனை நதியைக் கடந்து வீடுபோய்ச் சேர்வதற்கு வழி செய்யவேண்டுமென்றுஆங்கி ருந்த வியாசரைக் கேட்டார்கள். அவர்களிடம் வெண்ணெயும், தயிரும் வாங்கிப் புசித்துவிட்டு வியாசர் "யமுனு தேவி, நான் இன்றைக்கு உபவாசமிருப்பது உண்மையானல் இக்கோபி மார்கள் அக்கரை செல்வதற்கு வழி வகுக்கவேண்டும்" என்ருர். யமுனநதி பிளவுபட்டுத் தரை கண்ணில் தென்பட்டது. அக்கரை சேர்ந்ததும் கோபிமார்கள் "நாங்கள் கொடுத்த வெண்ணெய், தயிர் முதலானவற்றை அருந்திவிட்டு உபவாசமிருப்பதாகக் கூறினீர்கள். அது உண்மை என்று ஏற்றுக்கொண்டு யமுனுதேவி வழிவிட்டாள். இதிலுள்ள ரகசியம் எங்களுக்கு விளங்க வில்லை" என்ருர்கள். "நான் உள்ளிருக்கும் ஆத்மாவுக்கு யாவற்றை யும் அர்ப்பணம் செய்தேன். நான் உண்ணவில்லை" என்று வியாசர் விளக்கம் கூறினர்.

# நம் இன்றைய சமுதாயப் பிரச்னைகள்

(1900-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 23 ஆம் தேதி சுவாமி விவேகானந்தர் ஸ்ரீமதி மிருணளினிக்கு எழுதிய கடிதம்)

[ 422ஆம் பக்கத் தொடர்ச்சி ]

உயிரற்ற இயந்திரங்கள் போன்றும், ஜட நிலையில் இருக்கும் மண்ணுங்கட்டிகள் போன்றும், குவியலாகக் கிடக்கும் கூழாங்கற்கள் போன்றும் உள்ள மக்கள் கூட்டத்தைப் பெற்றுள்ள ஒரு சமுதாயம் சமுதாயமாகுமா? அப்படிப்பட்ட ஒரு சமுதாயம் எங்ஙனம் நலன் பெறமுடியும்? பலநூற்றுண்டுகளாக அடிமைகளாக வாழ்ந்திருந்ததற்குப் பதிலாக இப்பூமியில் மேலானவர்களாக வாழ்ந்து இருந்திருப்போமாஞல் நாம் நலம் பெற்று இருந்திருப்போம்; இந்தியா என்னும் இப்பூமி ஞான ஊற்ருகத் திகழ்ந்திருக்கும்.

சுயநலத் தியாகம் ஒரு சிறந்த பண்பன்ருே! பலபேரின் நன்மையைமுன்னிட்டு ஒருவருடைய நலனையும் ஒருவருடைய சுகத்தையும் துறப்பது மிக உயர்ந்த பண்பன்ருே! 'தேய்ப்பதனலோ, அழுத்தித் துடைப்பதனலோ அழகு மலர்ந்து விடுமா? அதுபோன்று முயற்சியினலும் வற்புறுத்தலினலும் அன்பை உண்டுபண்ண முடியுமா?' இது வங்காள நீதிமொழி. பிச்சைக்காரன் ஒருவன் துறப்பதில் என்ன மஹிமை இருக்கிறது! இந்திரிய சக்திகளை எல்லாம் இழந்தவன் இந்திரியங்களை அடக்குகிறேன் என்று சொல்வதில் என்ன புண்ணியம் உண்டு! உயர்ந்த லக்ஷ்யமில்லாதவன், இளகிய மனமில்லாதவன், சமுதாயத்தைப்பற்றிய உணர்ச்சியில்லாதவன் தியாகம் செய்ய என்ன இருக்கிறது? கைம்பெண் ஒருத்தியை உடன்கட்டை ஏறுமாறு வற்புறுத்துவதால் அவள் கணவனிடம் கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்த இயலுமா? மூடக்கொள்கைகளை மக்களிடையே வளர்த்து வருபவர்கள் மக்களைத் தர்ம நெறியில் செலுத்த முடியுமா? மக்களை உலகத் தளைகளிலிருந்து விடுவிக்கின்ற செயலை உங்களால் இயன்றளவு செய்யுங்கள். அழுக்கைக்கொண்டு அழுக்கைப் போக்க முடியுமா? பந்தத்தைக் கொண்டு பந்தத்தை அகற்ற முடியுமா? அதற்கு ஏதாவது சான்று இருக்கின்றதா? பொதுமக்களின் நலனுக்காக, உங்களுடைய மேலான இன்பத்துக்காக,உங்களுடைய உலக ஆசைகளை எல்லாம் எப்பொழுது துறக்கப் போகிறீர்கள்? உலகஆசைகளைத் துறந்துவிடும் பொழுதுதான் புத்தர் ஆவீர்கள். அப்பொழுது தான் நீங்கள் முக்தி அடைவீர்கள். அந்நிலை உங்களுக்கு இன்னும் வெகுதூரத்தில் இருக்கிறது. கேட்டின்மூலம் அப்பெருநிலையை அடைந்து விட முடியுமென்று நீங்கள் எண்ணுகிறீர்களா? பால்ய விவாகம் ஒரு வகையில் நல்லதுதான்! இப்படிப்பட்ட பழக்கம் வேறு எங்கேயாவது இருக்கமுடியுமா? கணவனுக்கும் மனைவிக்கும் பால்ய விவாகத்தின் மூலம் எத்தகைய அன்பு மலர்கிறது! ஆனல் ஆடவர்கள் அதிகாரம் படைத்தவர்களாக இருக்கிருர்கள். அவர்களுக்குச் சுயநலத் தியாகம் தேவை இல்லை போலும்! தன்னல மறுப்புக்கு விதவைகள் நல்ல உதாரணங்களாக இருக்கிருர்கள். மற்றவர்களுக்குச் சேவை செய்வதைவிடச் சிறந்த பண்பு வேறு என்ன இருக்க முடியும்! பிரம்ம நிலைக்கு உயர்ந்தவர்களுக்குத் தன்னலத் தியாகத்தைப் பற்றிக் கூறத் தேவை இல்லை. மற்றவர்களும் தன்னலத் தியாகம் செய்யப் பழக வேண்டும். பிறருக்காக அவர்கள் பாடுபட்டாக வேண்டும். பெற்ருேர்களும், உற்ருர்களும் தங்கள் குழந்தைகளின் நலன்களை இரக்கமின்றிக் கெடுத்து வருகிருர்கள். மற்றவர்களும் தங்கள் சுயநலத்துக்காக வாழ்கிருர்கள். இன்றைக்குச் சமுதாயத்தில் சர்வசாதாரணமாகச் சுயநலம் புகுந்துவிட்டது. சுயநலத்தியாகம் செய்பவனே ஆண்தகையாவான். மிரட்டலுக்குப் பயந்து ஒரு கையால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே மற்ருெரு கையால் கொடுக்கும் கோழைகளும் இருக்கின்ருர்கள். இப்படிப் பொருள்களை வழங்குவதால் என்ன பயன்! மன்னுயிர்களை எல்லாம் தன்னுயிர்போல் ஓம்பிப் பாதுகாக்கின்ற பண்புக்கும் இதற்கும் எவ்வளவு தூரம் என்பதைப் பாருங்கள். சிறு செடி ஒன்றை வேலியிட்டுப் பாதுகாத்து வரவேண்டும். முதலில் ஒரு பொருளினிடத்துச் சுயநலமற்ற அன்பைச் செலுத்திப் பழக வேண்டும். அவ்வன்பு படிப்படியாக வளர்ந்து உலகப் பொருள்கள் அனைத்திடத்

தும் செலுத்துகின்ற பேரன்பாக விரியவேண்டும். அதற்காகத்தான் இஷ்டதெய்வ வழிபாடு அமைந்துள்ளது. ஒருவன் தன் இஷ்ட தெய்வத்தின் மீது பக்தியை வளர்ப்பானுனல் பிறகு அவன் எங்கும் வியாபித்துள்ள பரம்பொருளின் மீது பக்தி செலுத்த முடியும்.

பிறன் ஒருவனுடைய நலத்துக்காகத் தன்னுடைய நலத்தைத் தியாகம் செய்கின்றவனே சமூக நலனுக்காகத் தான் துறவியாகப் போவதாகக் கூறலாம். ஏதாவது ஒன்றில் அன்பு செலுத்திப் பழகுவதற்கு முன்பு துறவை மேற்கொள்வது இயலாது. பற்றுதலுடன் செயல் புரிவதே பற்றற்ற செயல் புரிவதற்கு வழி காட்டுகிறது. பற்றே இல்லாத ஒருவன் பற்றைத் துறப்பது எப்படி? ஆசை இல்லாதவன் ஆசையைத் துறக்கிறேன் என்று சொல்வதில் என்ன பொருள் இருக்கிறது? இருளே இல்லை என்றுல் ஒளி என்று சொல்வதில் என்ன பொருள் இருக்கிறது?

ஆசையுடனும், பற்றுதலுடனும் செய்கின்ற வழிபாடு முதலில் நிகழட்டும். பிறகு பற்றற்றுச் செய்யும் உயர்ந்த வழிபாடு வந்து அமையும்.

பாரதத்தாயே! கவலையற்று இருங்கள். இப்பொழுது உங்களுக்கு வந்துள்ள சோதனைகளை வெல்லுவதன் மூலம் மேலும் நீங்கள் சிறப்படைவீர்கள். பெரிய உறுதியான மரத்தின்மீது புயல் காற்று வீசுகிறது. அது அம்மரத்தை மேலும் உறுதிப்படுத்துகிறது. நெருப்பைக் கிண்டிவிடுவதன் மூலம் அது நன்கு கொழுந்துவிட்டு எரியும். தலையில் தாக்குண்ட பாம்பு படமெடுக்கும். அங்ஙனம் தாக்கப்படுகின்ற சமுதாயம்தான் விழித்தெழும். நெஞ்சம் புண்படும் பொழுதும் சுற்றிலும் துயரம் வந்து தாக்கும் பொழுதும் அத்துயரத்தைத் துடைப்பதற்கான சக்தி பிறக்கும். ஆத்மீகத்துறைக்குச் சோதனை வந்துள்ளது. இச்சோதனை ஆன்மிக உலகத்தில் ஒரு பெரிய விழிப்புணர்ச்சியை உண்டுபண்ணும். ஆன்மீகம் உள்ளத்தில் இருக்கிறது. அது சுடர்விட்டுப் பிரகாசிக்கின்ற காலம் வந்தாகவேண்டும். அப்பொழுதுதான் ஞான விழிப்பு உண்டாகும். ஞான விழிப்பு உண்டாகி விட்டால் தீமைகள் அகன்றுபோம்; துயரங்கள் துடைக்கப்படும்.

ஆடம்பரத்திலும், சொகுசான வாழ்விலும் வளர்க்கப்பட்டவன், ரோஜா மலர்ப்படுக்கையில் உறங்கினவன், உலகத் துயர் கண்டு கண்ணீர் சொரியாதவன் எவனுவது சான்றோனுகத் திகழ்ந்து இருக்கின்றுனு? அத்தகையவன் உள்ளத்தில் ஆன்மீக ஒளியை மலரச் செய்ய முடியுமா? நீங்கள் ஏன் அழுவதற்கு அஞ்சுகின்றீர்கள்? உலகத்துயர் கண்டு நன்றுக அழச்செய்யுங்கள். உலகமக்களின் துயரைத் துடைப்பதற்காகவும், தெய்வக் காட்சிக்காகவும் உகுக்கும் கண்ணீர் வேண்டப்படுவதாகும். உங்கள் கண்ணீர் உங்கள் உள்ளத்திலுள்ள மாசைத் துடைத்து அருள் ஒளியை உண்டாக்கும். அப்பொழுது மனிதன், விலங்கு, மரம் என்ற வேற்றுமை நிறைந்த இவ்வுலகக் காட்சி சிறிது சிறிதாக மறையும். எங்கும் எல்லாப் பொருள்களிடத்திலும் இருக்கின்ற பிரம்மன் உங்கள் காட்சிக்கு வருவார். வேற்றுமை மறைந்து ஒற்றுமை நிலவும்.

समं पश्यन् हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
न हिनस्त्यात्मनात्मानं ततोयाति परांगतिम् ॥

ஸமம் பச்யன் ஹி சர்வத்ர ஸமவஸ்தித
மீஸ்வரம்
ந ஹிநஸ்த்யாத்மனுத்மானம் ததோயாதி
பராம்கதிம்

என்பது கீதா வாக்கியம்.

எங்கும் சமமாக நிலைத்திருப்பவனுகிய ஈசுவரனைப் பார்ப்பவன் தன்னைத்தானே உயர்த்திக் கொள்கிறுன். அதனுல் அவன் பரகதியை அடைகிறுன்.

பிரம்மஞானி பிரம்மத்துக்கு அன்னியமாக எதையும் காண்பதில்லை. அவனுக்கு உலகமெல்லாம் ஒரே பிரம்ம சொருபமாகிவிடுகிறது. அதுவே அவன் அடையும் பரகதியாம்.

"குருவியின் கூண்டு அழிந்துபோனுல் அக்குருவி ஆகாயத்தில் பறந்து போய்விடுகிறது. அது போன்று சரீர உணர்ச்சியும், உலக உணர்ச்சியும் மனத்தைவிட்டு நீங்கினுல் ஜீவாத்மாவானது பரமாத்மாவாகிய ஆகாயத்தில் பறந்து சென்று சமாதிநிலையில் ஐக்கியமாகின்றது." இது ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசமொழியாகும். பரமாத்மாவில் ஐக்கியமாகின்ற ஜீவன் பூரண சுதந்திரம் அடைகின்றுன். பேரானந்தம் அவனுக்குச் சொந்தமாகின்றது.

(முற்றும்)

# நாமதேவர் சரிதம்

(420ஆம் பக்கத் தொடர்ச்சி)

பக்தர்களுக்கு இறைவனிடமிருந்து சோதனைகள் வந்துகொண்டிருக்கும். சோதனைகள் மூலம் பகவான் பக்தர்களுடைய மனதைப் பண்படுத்துகிருர். நாமதேவருடைய வாழ்க்கையிலும் சோதனைகள் ஏற்பட்டன. நாமதேவர் சாதுக்களுக்கு அன்னமிட்டு உபசரிப்பதில் ஏராளமாகச் செலவு செய்தார். அதனால் குடும்பம் வறுமைக்கு உள்ளாகியது. நாமதேவருடைய தாயும், தந்தையும் பரம்பரைத் தொழிலாகிய தையல் வேலையைத் தொடர்ந்து செய்துவந்தார்கள். அத்தொழிலில் கிடைத்த சிறிதளவு வருவாயைக் கொண்டு பண்டரிநாதனுக்கு உணவு தயார் செய்து நைவேத்தியத்திற்கு அனுப்பி வைத்தார்கள். நாமதேவர் பண்டரிநாதன் ஆலயத்திலேயே வசிக்கலானர். "முதுமை அடைந்திருக்கும் நாங்கள் வசித்திருப்பது பெரிதன்று; இளைஞனுகிய நாமதேவன் உணவின்றி வாடுகின்ருன்" என்று அவருடைய பெற்ருேர்கள் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தனர். குடும்ப வறுமையைப் போக்குவதன்மூலம் பெற்ருேர்களின் வருத்தத்தைப் போக்கப் பகவான் சித்தம் கொண்டார்.

பண்டரிநாதன் ஒரு சேவகனைப் போல் வேடம் பூண்டு தன் வாகனமாகிய கருடனைக் காளையாக்கி அதன் மீது பொற்காசுகளை மூட்டையாகக் கட்டி ஏற்றித் தாம்சேட்டி வீட்டுக்கு வந்தார். வீட்டுக்கு முன்னல் வந்து நின்று நாமதேவரைப் பன்முறை அழைத்தார். வீட்டுக்குள் இருந்த குணபாய் "நாமதேவரை அழைப்பது யார்?" என்று கேட்டாள். சேவகன் வேடத்திலிருந்த பகவான் "நான் வெகு தூரத்திலிருந்து நாமதேவரைப் பார்ப்பதற்காக வந்திருக்கின்றேன். நீண்டதூரம் நடந்து வந்ததால் கால் வலிக்கின்றது. நாமதேவரைச் சீக்கிரம் அனுப்புங்கள்" என்ருர். யாரோ விருந்துக்கு வந்திருக்கிருர் என்று குணபாய் கருதினுள். மேலும் பேச்சுக் கொடுத்தால் தனக்கும் மாட்டுக்கும் உணவு கேட்பான் என்று எண்ணி நாமதேவர் வீட்டில் இல்லை என்று கூறினுள். "நான் அவரைப் பார்ப்பதற்காக வெகுதூரத்திலிருந்து வந்திருக்கிறேன். நீங்கள் அன்பாய்ப் பேசாமல் வீட்டுக்குள் செல்கிறீர்கள். வெய்யிலில் காய்ந்து வந்துள்ள எனக்குத் தாகத்துக்குத் தண்ணீராவது கொடாமல் கடுகடுத்துப் பேசுகின்றீர்கள். உங்களை நாடி வந்ததற்குச் செய்கின்ற உபசாரம் இதுதானு? நாமதேவர் வீட்டுக்கு வரும் வரையில் நான் இருக்கப்போகிறேன்" என்று வீட்டு வாயிலில் உட்கார்ந்து இருமிக்கொண்டிருந்தார். குணபாயும் கோபப்பட்டவளாய் "நீ யார்? பங்காளியைப் போலவும், கடன்காரன் போலவும் வாசற்படியில் உட்கார்ந்து விட்டாய். விரைவில் இவ்விடத்தை விட்டு எழுந்து போ" என்று கடிந்துகொண்டாள். குணபாய் கூறியதைச் சட்டை செய்யாமல் வாசற்படியில் அசையாது அமர்ந்திருந்தார். குணபாய்க்கு மேலும் கோபம் ஏற்பட்டது. "அகங்காரம் பிடித்தவனே, உனக்குத் தாகமாக இருந்தால் பக்கத்தில் இருக்கும் கேணியில் நீர் இறைத்து அருந்திவிட்டுப் போ. வழிவிடு" என்று கடுமையாகக் கூறினுள். அச்சேவகன் எழுந்து செல்லாமல் குணபாயிடம் மேலும் வம்பிழுத்தான். வீட்டுக்குள் இருந்த தாம் சேட்டி வெளியில் வந்து "நீ யாரடா? இங்கு வந்து ஏன் வம்பு செய்துகொண்டிருக்கிருய்? எழுந்து வெளியில் செல். இல்லாவிட்டால் உதை வாங்கிக்கொள்வாய்" என்று கடுமையாகப் பேசினர். "நான் உங்களுக்காக இங்கு வரவில்லை. நாமதேவருக்காக இங்கு வந்தேன். கேசவசெளக்கார் என்பவர் திரவியம் கொடுத்து அனுப்பியுள்ளார். நீங்களோ பரமலோபிகளாக இருக்கிறீர்கள். உங்களுக்கா அத்திரவியத்தைக் கொடுப்பது!" என்று கூறி மாட்டை விரட்டி ஓட்டும் பொழுது பையிலிருந்த வராகன்கள் சிந்தின. வராகனைப் பார்த்ததும் குணபாயும், தாம்சேட்டியும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அந்தச் சேவகனை மகிழ்ச்சியோடு வீட்டுக்கு அழைத்து "அப்பா, எங்களுக்குற்ற வறுமையினல் நாங்கள் என்னென்னவோ பேசிவிட்டோம். அதைப் பொருட்படுத்தாது கொண்டுவந்த திரவியத்தைக் கொடுத்து

விட்டுப்போ'' என்ருர்கள். அப்பொழுது சேவகன் வேடத்திலிருந்த பகவான் அங்குள்ள ஜனங்களைப் பார்த்து "மகாஜனங்களே, இப்போது இவர்கள் செய்யும் மரியாதையைப் பாருங்கள். இம் மரியாதை எனக்கா இந்தத் திரவியத்துக்கா? தரித்திரகாலத்தில் அன்ரே தர்ம குணத்தைக் காட்டவேண்டும். தரித்திர காலத்தில் தர்ம குணமும், செல்வம் மிகுந்த காலத்தில் அகங்காரமின்மையும், துன்பம் வருங்காலத்தில் தைரியமும், அவமானம் ஏற்படும் காலத்தில் மகிழ்ச்சியும் உடையவர்களே மக்களுள் சிறந்தவர்களாவார்கள். ஆனல் இவர்களை எப்படிப் புண்ணிய சீலர்கள் என்று சொல்லுவது! இவர்கள் எப்படித் தர்மவான்கள் ஆவார்கள்? இவ்வுலகில் பணம் என்ருல் பிணமும் வாய் திறக்கும் என்பதை இன்றைக்கு இவர்களிடம் கண்கூடாகக் கண்டேன். மானம் போனுலும் வெகுமானம் கிடைத்தால் போதுமென்று நினைக்கும் இவர்களைப் போன்ற மக்கள் உலகில் இருக்கத்தான் செய்கிருர்கள். பொருளாசையும், புலால் உடம்பில் பற்றும் உடையவர்கள் புலையர்கள் ஆவார்கள். இவர்களுக்காக நான் இத்திரவியத்தைக் கொண்டு வரவில்லை. நாமதேவருக்காகத்தான் இதைக் கொண்டுவந்தேன்.'' இங்ஙனம் கூறி மாட்டின் மீதுஇருந்த மூட்டையைக் கீழே தள்ளினர். விடெல்லாம் பொற்காசுகள் சிதறின. பகவான் களிப்படைந்தவராய் "ஐயா, தாம்சேட்டி, கேசவசௌக்கார் இருக்கும் இடம் வைகுந்தமாகும். அவர் நாமதேவரை நன்கு அறிவார். அவர் பத்துப் பைகளில் பொற்காசுகளை அனுப்பியுள்ளார். ஒவ்வொரு பையிலும் பதினயிரம் பொற்காசுகள் இருக்கின்றன. அவற்றை எண்ணிக் கணக்குப் பார்த்துக் கொள். நான் இந்த மாட்டை சந்திரபாகா நதியில் குளிப்பாட்டிவிட்டு நானும் ஸ்நானம் செய்துகொண்டு பண்டரிநாதன் ஆலயத்திற்குச் சென்று நாமதேவரைச் சந்திக்கிறேன்'' என்று கூறி மறைந்தார். இறைவன் சேவகன் வடிவில் வராகனைக் கொண்டு வந்து கொடுத்த செய்தி ஆலயத்திலிருந்த நாமதேவருக்கு எட்டியது. அன்று நாமதேவர் நைவேத்தியத்தை இறைவனுக்குப் படைத்து இறைவன்மீது ஸ்தோத்திரம் பாடினர். அப்பொழுது பகவான் அவர் முன் பிரசன்னமாகிப் பகர்ந்ததாவது: "நாமதேவரே! நீர் நீண்ட நாட்களாகச் சந்நிதானத்துக்குக் காவலாக இருப்பதோடு அன்னம் ஊட்டும் சேவகனுகவும் இருந்து வருகிறீர். அதற்கு வேண்டிய ஊதியத்தைக் கொடுத்துள்ளேன். இனிமேல் இரவில் வீட்டிலும், பகலில் ஆலயத்திலுமிருந்து பக்தி செய்து வருவீராக.'' நாமதேவர் இதைக் கேட்டு ஆனந்தம் அடைந்தார்.

நாமதேவர் அன்னதானப் பணியைச் சிறப்புடன் செய்துகொண்டு பண்டரிநாதன் வழிபாட்டிலும் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அவர் பந்தலில் இருந்துகொண்டு குடும்பத்தை நடாத்தி வந்தார். மழைக்காலத்தில் அது ஒழுகியது. பெற்ருேர்கள் பந்தலைச் சரிசெய்ய வேண்டுமென்று நாமதேவரைக் கேட்டார்கள். அதற்கு நாமதேவர் ''எல்லாரையும் இறைவன் துணையாயிருந்து காப்பாற்றி வருகிருர். ஈ எறும்புமுதல் எல்லா உயிர்களையும் காப்பாற்றி வரும் இறைவன் நம்மை மட்டும் காப்பாற்ருமல் விட்டு விடுவாரா?" என்று கூறினர். அன்று இரவு அவர் வீட்டில் தங்கியிருந்தபொழுது காற்றுடன் மழை பலமாகப் பெய்தது. நாமதேவருடைய பெற்ருேர்களும், மனைவியும், குழந்தையும் மழையிலிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்வதற்காக வீட்டில் ஒழுகாதிருக்கும் இடத்திற்குச் சென்று தங்கினர்கள். அப்பொழுது பகவான் கூலியாளாக வேடம் தாங்கி வந்து நாமதேவரைப் பன்முறை கூப்பிட்டார். நாமதேவர் அப்பொழுது தியானத்தில் இருந்தார். நாமதேவருக்குப் பக்கத்தில் சென்று ''அடா! நாமதேவா! நான் பலதடவை கூப்பிட்டும் நீ பேசாதிருக்கின்ருய். உன் மாமனர் லட்சாதிபதியாக இருக்கிருர். அவர் இப்பந்தலைச் சரிசெய்து தரக்கூடாதா? இது அவருக்கு ஒரு பெரும் சுமையாகிவிடுமா? குழந்தையும் தாயும் நனைந்து ஜன்னிகண்டு இறந்துவிடுவார்களே என்று பக்கத்து வீட்டுக்காரனுகிய நான் இப்பந்தலைச் சரி செய்வதற்காகச் சாமான்களுடன் வந்திருக்கிறேன். துணைக்கு உன்னை அழைத்தால் நீ பேசாதிருக்கின்ருய்'' என்று அவர் கூறும் பொழுதே பந்தல் ஒரு பக்கம் சரிந்து நாமதேவர் மீது விழுந்

தது. நாமதேவரும் எழுந்து வந்து அவருடன் சேர்ந்து பந்தலை எடுத்து நிறுத்தி அதைச் சரி செய்தார். பந்தலைக் கட்டிமுடித்ததும் கூலிஆள் வேடத்தில் வந்திருந்த பகவான் தான்கொண்டு வந்திருந்த சாமான்களுக்குப் பணம் கேட்டார். "என்னிடத்தில் பணம் ஏது?" என்று நாமதேவர் கூறினர். அதற்கு அந்த ஆள் கூறியதாவது: "சாமான்களுக்கு விலையும், எனக்குக் கூலியும் கொடுக்காவிட்டால் நான் உன்னைச் சும்மா விடமாட்டேன். இப்பொழுது சுகம் அடைந்தது உன் குடும்பமா, என் குடும்பமா? சாமான்களுக்குரிய பணத்தையும், எனக்குரிய கூலியையும் கொடுக்காவிட்டால் இப்பந்தலை நெருப்பு வைத்துக் கொளுத்தி விடுவேன்." இவ்விதம் கூறிக்கொண்டே பந்தலிலிருந்து வெளியே சென்ற ஆள் மறைந்துவிட்டார். நாமதேவர் வெளியில்போன ஆள்வராததைக்கண்டு விடிவதற்கு முன்பே வீட்டைவிட்டு வெளியேறி சந்திரபாகா நதியில் ஸ்நானம் செய்துவிட்டுப் பண்டரிநாதன் கோவிலுக்குச் சென்று உருகிப் பாடிக்கொண்டிருந்தார். பகவான் நாமதேவர் முன்தோன்றி "இரவில் கூலி ஆளாக வந்து பந்தலைச் சரிசெய்து தந்தேன். உன் குழந்தைக்கு விஷ்ணுதாசன் என்று பெயர் வை" என்று கூறி மறைந்தார். நாமதேவர் பகவானின் செயலைக்கண்டு ஆனந்தம் அடைந்தார். மீண்டும் அவர் அன்னதானத்திலும் பக்தியிலும் மூழ்கி இருந்தார். குடும்பத்தில் அவ்வப்பொழுது வருகின்ற விசேஷங்களுக்கெல்லாம் வேண்டிய பொருள்களை இறைவன் கொடுத்து உதவிக்கொண்டே இருந்தார்.

ஞானேஸ்வரர் என்ற மஹானின் நட்பு நாமதேவருக்குக் கிடைத்தது. அவருடைய உபதேசங்களையும் பக்தி பண்ணினல் முக்தி தானே வரும் என்ற கருத்தையும் எங்கும் பரவச் செய்தார். ஞானேஸ்வரரோடு பலக்ஷேத்திரங்களுக்கு யாத்திரை சென்றார். விட்டோபாவினிடம் பிரம்மோபதேசம் பெற்றார். பகவானிடம் பக்தி செய்வதிலும், பக்தியை மக்களிடம் பரப்புவதிலும் வாழ்நாள் முழுவதும் நாமதேவர் ஈடுபட்டிருந்து இறுதியில் பாண்டுரங்கனுடைய திருவடியை அடைந்தார்.

"முதலில் ஈசுவரனைக் காண். பிறகு நீ உலக வாழ்க்கையில் ஈடுபடலாம். அப்பொழுது உனக்கு வேண்டியவற்றை எல்லாம் ஈசனே கொண்டு வந்து சேர்ப்பார்." இது ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசமாகும். இவ்வுபதேசத்துக்கு ஏற்ப நாமதேவருடைய வாழ்க்கை அமைந்திருந்தது. "எவனொருவன் வேறு எண்ணமில்லாது என்னையே சிந்தித்துக் கொண்டிருக்கிறானே அவனுக்கு நான் இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டியவற்றை எல்லாம் கொண்டு வந்து சேர்ப்பதோடு அவற்றை நான் பாதுகாத்தும் வைக்கின்றேன்" என்று கண்ணன் கீதையில் கூறியுள்ளார். முழு மனதையும் ஈசன் பால் செலுத்திவிட்டால் அவருடைய உதவி யாண்டும் நமக்கு வந்துகொண்டிருக்கும் என்பதற்கு நாமதேவருடைய வாழ்வு சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

ஆன்றோர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நாம் ஊன்றிக் கவனித்துப் படித்தல் நல்லது. இறையருளில் தோய்ந்து தம்மை மறந்து உலகத்திற்காக வாழ்ந்த உத்தமர்களின் கீர்த்தி சந்திர சூரியரோடு நின்று நிலவுவதாகும். அவர்களுடைய அருள் உரைகளைப் படிப்பதால் நாம் உள்ளத் தெளிவு பெறலாம். அவர்கள் எந்தெந்தச் சூழ்நிலைகளில் எவ்வெவ்வாறு நடந்துகொண்டார்கள் என்பதை அறிந்து நாமும் அவ்வாறே ஒழுகலாம். எத்தகைய பிரச்னைகளை அவர்கள் எவ்வாறு கையாண்டார்கள் என்பதைத் தெரிந்துகொண்டால் நம்முடைய அனுபவ அறிவும் மேன்மை அடையும். அனைத்துக்கும் நம் இதயம் அறிந்த சாட்சிகளாக அவர்கள் இலங்குகின்றார்கள்.

பக்தியினால் முக்திபெற்ற சான்றோர்களின் வாழ்க்கை வரலாற்றில் நம் அறிவுக்கு எட்டாத பல அற்புத நிகழ்ச்சிகள் நடைபெறுவதுண்டு. இக்கால இளைஞர்கள் அவற்றை வெறும் வேடிக்கையாகக் கருதி ஒதுக்கலாம். ஆனல் நமது சிந்தை, சொல், செயல் ஆகியவற்றைத் தூயனவாக்கிப் பண்பிலும் தரத்திலும் அப்பெரியோர்களுக்கு நிகராக நாம் வாழ்வோமானல் நம்மாலும் அத்தகைய ஆற்றல்களைப் பெறுதல் சாத்தியம். இறைவனோடு அவர்கள் எத்தகைய இணக்கம் கொண்டிருந்தார்கள் என்பதை அறிந்து நாம் இறைவனோடு அத்தகைய இணக்கம் வைக்கவேண்டும்.

(முற்றும்)

# கற்பரசி சகுந்தலை

(சுவாமி துருவானந்தர்)

[ 428ஆம் பக்கத் தொடர்ச்சி ]

கடைசியில் அந்த நாளும் வந்தது. கண்வ மகரிஷி ஆஸ்ரம வாசிகள் நால்வரோடு என்னை ஹஸ்தினபுரத்துக்கு அனுப்பி வைத்தார். அப்பொழுது என் வளர்ப்புப் பிராணிகளை விட்டுப் பிரிய முடியாமல் தவித்தேன். என் வளர்ப்புத் தந்தை கண் கலங்கி நிற்கும் என்னைப் பார்த்து "மகளே, நீ அரசனுக்கு மனைவியாக ஆனவள். அதை முன்னிட்டு அகந்தை கொள்ளாதே. கணவனுக்குத் தெரியாத எந்த ரகசியத்தையும் மனதில் வைக்காதே. உன் மாமன், மாமி முதலியோரை தெய்வங்களாக வணங்கு. பிறருடைய கஷ்டத்தை அனுதாபத்தோடு கேட்டறி. கணவனுடைய எண்ணத்துக்கு மாறாக நடக்காதே. எதையும் வெளிப்படுத்திப் பேசக்கூடாது. உன் நடத்தையால் குலத்துக்குப் பெருமை தேடித் தரவேண்டும். இறை வழிபாடு தவருது செய்துவா" என்ருர்.

ஆஸ்ரமத்தை விட்டுப் புறப்பட்ட நாங்கள் காட்டு வழியாகச் சென்ரேம். பல இடங்களைக் கடந்து கங்காநதி தீரத்துக்கு வந்தோம். கங்கையில் நீராடிப் பூஜைகளை முடித்துப் புறப்பட எண்ணினேம். புனித கங்கையில் இறங்கி நீராடும்பொழுது என் கையிலிருந்த மோதிரம் நழுவி நீரில் விழுந்து விட்டது. எனக்கிருந்த பரபரப்பில் நான் அதைக் கவனிக்கவில்லை.

மாலையில் அஸ்தினபுரம் சென்று சேர்ந்தோம். ஆங்கிருந்த வாயில் காப்போனிடம் செய்தி சொல்லி அனுப்பினேம். அரசனிடமிருந்து உள்ளே வரச் சொல்லி அனுமதி வந்தது. கண்ணைக் கவரும் வண்ண ஓவியங்களைப் பார்த்துக்கொண்டே போனேம். அரசர் முன்னிலையில் எங்களை அறிமுகப்படுத்தினர்கள். அவர் முகத்தில் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை. நாங்கள் யார் என்றும், அரண்மனைக்கு வந்த நோக்கம் என்ன என்றும் அந்நியரை விசாரிப்பது போல் கேட்டார். எனக்கு இது பேர் அதிர்ச்சியை உண்டு பண்ணியது. எனக்குத் துணையாக வந்த ஆஸ்ரமவாசிகள் என்னைப்பற்றி அறிமுகப்படுத்தி, மணமானவள் கணவனுடன் வாழுவதே முறை என்று உணர்த்தி, காட்டில் நடந்த சம்பவங்கள் அனைத்தையும் ஒன்று விடாமல் கூறி, என்னை ஏற்றுக் கொள்ளும்படி அறிவுறுத்தினர். துர்வாச மகரிஷியின் சாபத்துக்கு ஆளான எனக்கு மன்னரின் போக்குப் புரிபடவில்லை. ஆனல் அவரோ தாம் திருமணம் ஆகாதவர் என்றும், சகுந்தலை என்ற இந்தப் பெண்ணை இதற்கு முன்பு பார்த்ததே இல்லை என்றும் கூறி எங்களை வெளியே போகச் சொன்னர். இனியும் பேசாதிருப்பது தகாது என நான் அவரிடம் நேரிடையாகப் பேசலானேன்.

"அரசே! நீங்கள் காட்டிற்கு வேட்டையாட வந்தவர் என்றும், ஹஸ்தினபுர மன்னன் துஷ்யந்தன் என்றும் என்னிடம் கூறிக் காந்தர்வ விவாகம் பண்ணிக்கொண்டு ஓர் ஆண்டு ஆகிறது. கட்டிய மனைவியை இத்தனை பேருக்கு நடுவில் வைத்து அவமானப்படுத்துவது நன்ருக இருக்கிறதா? தெரிந்தும் தெரியாதவர் போன்று எங்களிடம் நடிக்கிறீர்களா இல்லை, இது சோதனையா?" என்று தலைநிமிர்ந்து பேசினேன். அதற்கு அவர் "பெண்ணே! ஏன் இப்படிச் சொல்லம்புகளால் என் உள்ளத்தைக் குத்தித் துன்பப்படுத்துகிருய்? உன்னை இதற்கு முன்பு எங்கும் பார்த்ததாக ஞாபகம் இல்லை. அப்படியிருக்கும்போது நீதான் என்மீது வீண் பழியைச் சுமத்துகிருய்" என்று கூறினர். உடனே அருகிலிருந்த எங்கள் ஆஸ்ரமவாசி ஒருவர் சகுந்தலையைப் பார்த்து "உன்னைவிட்டுப் புறப்படும் முன்பு அவர் ஞாபகார்த்தமாக உனக்குக் கொடுத்த மோதிரத்தைக் கழற்றிக் காட்டு. அப்போதாவது அவருக்குப் பழைய ஞாபகம் வருகிறதா எனப் பார்ப்போம்" என்று கூறினர். நான் கை விரல்களைப் பார்த்தேன். மோதிரம் காணப்படவில்லை. அத்தாட்சியாக அடையாளம் காட்டுவதற்கு என்று வைத்திருந்த மோதிரமும் காணமல் போய்விட்டதே! இது என்ன சோதனை என்று எண்ணிய எனக்கு இந்த உலகமே தலைகீழாகச் சுழல்வதுபோல் இருந்தது. இதயம் படபடத்தது. இனி அதை

எங்கே போய்த் தேடுவது? என் நிலை மிகவும் பரிதாபகரமாக இருந்தது. ஆஸ்ரமவாசிகள் பாவம் என்ன செய்வார்கள்? கணவன்தான் மனைவிக்குப் புகலிடம் என்று சொல்லி ஆசீர்வதித்து என்னை அரண்மனையிலேயே விட்டு விட்டுச் சென்றுவிட்டனர். ஒன்றும் புரியாது அரசரும் திகைத்து நின்றார். அப்போது ராஜகுரு அரசரிடம் "மேன்மை மிகுந்த கண்வ மஹரிஷியின் வளர்ப்பு மகள் கர்ப்பிணியாயிருப்பதால் அவள் என் ஆஸ்ரமத்திலேயே குழந்தை பிறக்கும்வரை தங்கட்டும். மற்றவைகளைப் பின்பு பார்க்கலாம்" என அரசனிடம் கூறி என்னை அவர் ஆஸ்ரமத்திற்கு அழைத்துச் சென்றார். கட்டிய கணவனால் கைவிடப்பட்டுத் தவித்த நான் "குழந்தையாயிருந்தபோதே என்னைக்கொன்று போட்டிருக்கக்கூடாதா? அம்மா, என்னை ஏன் உயிரோடு காட்டில் விட்டுச் சென்றீர்கள்?" என்று வாய் திறந்து கதறித் துடித்தேன். என்னுடைய புலம்பலைக் கேட்டவுடன் எங்கேயோ வானவெளியிலிருந்து ஒரு குரல் வந்தது. "மகளே! வா. என் இருப்பிடம் போவோம். நான்தான் உன் தாய்" என்று ஒரு தேவமாது பூமியில் நடந்துசென்ற என்னைத்தன் கைகளால் பிடித்துத் தேவலோகம் கொண்டு சென்றாள். பிறகு பிருகு மகரிஷி ஆஸ்ரமத்தில் என்னைத் தங்கும்படி செய்தாள். நான் திடீரென்று தேவலோகப் பெண்ணொருத்தியால் ஆகாயத்தில் தூக்கிச் செல்லப்படுவதைப் பார்த்த ராஜகுரு சம்பவங்களனைத்தையும் அரசர் துஷ்யந்தரிடம் விவரித்தார். ஒன்றுக்குப் பின் ஒன்றாக வந்த செய்திகள் அவரைக் குழப்பிக் கொண்டிருந்தன.

இதற்கிடையில் ஹஸ்தினபுர நகரக் கடை வீதியில் ஒரு சம்பவம் நடைபெற்றது. மீனவன் ஒருவன் தான் பிடித்த மீன்களைத் தரம் வாரியாகப் பிரித்துக் கூறு போட்டுக் கொண்டிருந்தான். ஒரு பெரிய மீனின் வயிற்றை அறுத்துக்கொண்டிருந்தபொழுது அதன் வயிற்றிலிருந்து ஒரு மோதிரம் கீழே விழுந்தது. அந்த மோதிரம் மிகவும் பிரகாசமாக ஜொலித்தது. விலை உயர்ந்த மோதிரம் தனக்குக் கிடைத்ததாக எண்ணிய அவன் அதனை ஒரு நகை வியாபாரியிடம் விற்க முயன்றான். அரச முத்திரை பொறிக்கப்பட்டிருந்த அந்த மோதிரத்தைக் கண்ட அந்த நகை வியாபாரி சந்தேகித்து 'இவன் ஒரு வேளை அரசரிடமிருந்து மோதிரத்தைத் திருடியிருப்பான்' எனத் தீர்மானித்து அந்த வழியே சென்ற அரண்மனைக் காவலாளிகளிடம் பிடித்து ஒப்படைத்து மோதிரத்தையும் கொடுத்தனுப்பினான். அரசரிடம் மோதிரத்தைக் காவலாளிகள் ஒப்படைத்தனர். மோதிரத்தைப் பார்த்ததும் துர்வாச மஹரிஷி இட்ட சாபம் விலகலாயிற்று. உடனே அரசருக்குப் பழைய ஞாபகம் வரத் தொடங்கி விட்டது. தான் பண்ணிய தவறுகளை நினைத்து நினைத்துப் புலம்பினார். உரிய நேரத்தில் மோதிரத்தைக் கொடுத்துத் தன் பழைய நிலையை உணர்த்தித் தன்னைப் பெரும் பழியினின்று காப்பாற்றிய அம்மீனவனுக்கு நிறைய பொன்னும் பொருளும் கொடுத்து அனுப்பி வைத்தார் மன்னர்.

நேசித்த மனையாளை வெறுத்து ஒதுக்கியதற்குத் தன் வினைப்பயனே காரணம் என்று எண்ணி வேதனைப்பட்டார் அரசர். ஆண்டுகள் இங்ஙனம் கழிந்துகொண்டிருந்தன. ஒரு நாள் தேவேந்திரனின் தேர்ப்பாகன் மாதலி ஹஸ்தினபுரத்துக்குத் துஷ்யந்த மன்னரைக் காண வந்தான். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கடும் யுத்தம் துவங்கியுள்ளது என்றும் துஷ்யந்தன் தேவர்களுக்கு உதவ வேண்டும் என்றும் அவன் கூறினான். போரிலே விருப்பம் கொண்டவரும், அறத்தைப் பின்பற்றுபவருமான துஷ்யந்தன்தான் அரக்கர்களை வென்று தேவர்களைக் காக்க முடியும் என்று தேவேந்திரன் கருதினான் போலும். துஷ்யந்த மன்னர் மாதலியோடு புஷ்பக விமானத்தில் தேவலோகம் போய் அரக்கர்களை அழித்துவிட்டுப் பூமியை வந்தடைந்தார். மாதலியும் கண்ணைக் கவரும் வண்ணப் பூங்கா ஒன்றில் துஷ்யந்தனை இறக்கிவிட்டுத் தன் இருப்பிடம் சென்றான்.

தனியே வனத்தில் இறங்கிய துஷ்யந்தன் அந்தப்பகுதிகளில் உள்ள இயற்கைக் காட்சிகளைக் கண்டு ரசித்த வண்ணம் நடந்து கொண்டேயிருந்தார். அந்த இடத்தில் ஒரு குழந்தையின் குரல் கேட்டது. அந்தக் குரல் வந்த திசை நோக்கிச் சென்றார் மன்னர்.

ஒரு சமவெளியிலே புற்கள் அழகாகச் செழித்து வளர்ந்திருந்தன. அந்த இடத்தில் சிறுவன் ஒருவன் சிங்கக் குட்டி ஒன்றேடு விளையாடிக் கொண்டிருந்தான். கட்டழகே வடிவெடுத்த அந்தச் சிறுவன் அஞ்சாது சிங்கத்தோடு விளையாடினன். தம்மை மறந்தவராகத் துஷ்யந்தன் அந்தச் சிறுவன் அருகே சென்றுர். அப்பொழுது அங்கே வந்த சேடி 'என்ன, பரதன் கழுத்தில் கட்டப்பட்டிருந்த தாயத்துக் கீழே கிடக்கிறதே! யாராலும் தொடமுடியாத தாயத்து எங்ஙனம் கீழே விழுந்திருக்கும்?' என்றுள். இதைக் கேட்டுக்கொண்டிருந்த துஷ்யந்தன் அந்தத் தாயத்தை எடுத்து அவன் கழுத்தில் கட்டினர். இந்த அதிசயச் செயல்களைப் பார்த்த அந்த சேடிப் பெண்கள் அந்தத் தாயத்தின் மகிமையைப்பற்றி அரசனிடம் கூறினர்கள். 'அந்தத் தாயத்து மரீசி மஹரிஷியினல் மந்திரித்துப் பரதன் கழுத்தில் கட்டப்பட்டது. பரதனுடைய தாய், தந்தை, மரீசி மஹரிஷி இவர்களைத் தவிர வேறு யார் அதைத் தொட்டாலும் அந்தத் தாயத்துப் பாம்பாக மாறித் தொட்டவரைக் கடித்துவிடும். ஆனல் நீங்கள் தொட்டும் ஏதும் நிகழவில்லை. நீங்கள் யார்?" என்று கேட்டனர். அதற்குள் மன்னர் குழந்தையைத் தழுவி 'மகனே' என்று தூக்கப்போனர். அப்போது "துஷ்யந்தமன்னர் தாம் என் தந்தை; மகனே என்று வேறு யாரும் அழைக்க வேண்டாம்" என்று சொல்லி அச்சிறுவன் ஓட முயன்றுன். ஆனல் மன்னவனே "உன் தாயினிடம் என்னை அழைத்துப் போ" என்று சொல்லி நான் இருக்கும் ஆஸ்ரமப் பகுதிக்கு அவனேடு வந்தார். கட்டிய கணவரை வெகுநாள்கழித்து மீண்டும் பார்த்த மகிழ்ச்சியில் மரீசி மகரிஷியிடம் அவரை அழைத்துச் சென்றேன். "துர்வாச மஹரிஷி இட்ட சாபத்தால் உண்மையை மறந்து இவ்வளவு காலம் அல்லல்பட வேண்டியதாகிவிட்டது. எல்லாம் நன்மைக்கே" என்று கூறிய மஹரிஷி "உன் மகனையும், உன் மனைவி சகுந்தலையையும் அழைத்துக்கொண்டு அரண்மனை செல்லுவாயாக. சகுந்தலை போன்ற கற்பரசிகளால்தாம் உலகம் அழியாதிருக்கிறது. குடிமக்களே உன் குடும்பம், அவர்களைப் போற்றிப் பாதுகாத்து வா. உன் மகன் பேரரசனுகத் திகழப் போகிறுன். அவனுடைய பெயரால் இந்த நாடு பாரத நாடுஎன அழைக்கப் பெறும். சென்று வருக" என ஆசி கூறி அனுப்பிவைத்தார் மரீசி மகரிஷி. (முற்றும்)

## கொல்லிமலையில் அறப்பளீசுவரர் ஆலயம்

சேலம் மாவட்டத்தில் அமைந்திருப்பது கொல்லிமலை. கடைச்சங்க காலத்தில் கடையெழு வள்ளல்களில் ஒருவனன வல்வில் ஓரி இருந்து அரசாண்ட பகுதி இது. தஞ்சைப் பெரு உடையார் கோயிலை எடுப்பித்த இராஜ ராஜனின் பாட்டியார் செம்பியன்மாதேவி இங்கு அறப்பளீசுரருக்கு ஓர் ஆலயம் அமைத்தார். 'கொல்லிக் குளிர்வரை' என்று இத்தலத்தைச் சம்பந்தரும், நாவுக்கரசரும் பாடியுள்ளனர். அருகாமையில் ஓடும் மாவாறு நூற்று எண்பது அடி உயரத்தில் தன்புனல் அருவியாய் வீழ்கிறது. மருத்துவப் பயன் மிகுந்த பலவகை மூலிகைகள் இங்கே கிடைக்கின்றன. சித்தர் பெருமான்கள் வாழும் திருத்தலம் இது.

பழுதுபட்டுக் கவனிப்பாரின்றி இடிபாடுகளுடன் கிடந்த இக்கோயிலைச் சீர்ப்படுத்தி இதுவரை பதினன்கு லட்சம் ரூபாய்க்குமேல் செலவு செய்து அற்புதமாகப் புதுப்பித்துக் கட்டி வருகின்றனர் நம் அன்பர் பெருமக்கள். கோயிலில் யோக சாஸ்திர நிலைகளை விளக்கும் சின்னஞ்சிறு சிற்பங்களையும், முப்பதோடு ஆறு சித்தர் கணங்களின் வடிவங்களையும், பழங்காலக் கல்வெட்டுக்களையும் காணலாம். அழகியதொரு இராஜ கோபுரம் கட்டவும் ஏற்பாடாகி வருகிறது. சென்ற நவம்பர் 25ஆம் நாள் இங்கு நிகழ்ந்த திருக்கோயில் வழிபாட்டில் பேரூர், கௌமார மடங்களின் சந்நிதானங்கள் கலந்துகொண்டனர். அந்தர்யோகங்கள் நடத்தலாமென்றும் தீர்மானம் செய்யப்பட்டது.

# மகிஷாசுரமர்த்தனி

( சிறு தொடர் கதை )

( சிவத்தொண்டன் )

[ 435 ஆம் பக்கத் தொடர்ச்சி ]

சிவனடியின் மூத்த புதல்வர் குணபரன் கானடா நாட்டில் மிகுந்த செல்வாக்கோடு வாழ்ந்து வந்தார். கப்பல் கட்டும் தொழிலிலும், கடல் வாணிபத்திலும் அவருடைய நிறுவனங்கள் புகழ் பெற்று விளங்கின. அவற்றின் கிளைகள் உலகின் பல்வேறு பகுதிகளில் மிகத் திறமையுடன் இயங்கி வந்தன. அண்டை நாடான ஐக்கிய அமெரிக்காவில் இருந்த பல மாபெரும் அமைப்புக்களில் குணபரனுடைய நிறுவனம் பன்மடங்கு மூலதனம் செய்திருந்தது. எனவே நாட்டின் குறிப்பிடத் தகுந்த கனவான்களில் ஒருவராக அவர் பேரும் புகழும் பெற்று விளங்கினர்.

அறிந்தவர் தெரிந்தவர்களிடையே அவரை விட அவருடைய மனைவி மிகவும் பிரசித்தி பெற்றிருந்தாள். முன்பின் அறியாதவர்கள் அவளை முதன் முதலில் பார்க்க நேர்ந்தால் 'பாவம், இந்தப் பெண்மணிக்குச் சித்தப்பிரமை போலிருக்கிறது' என்றுதான் எண்ணுவார்கள். அவளுடைய பேச்சும், நடவடிக்கைகளும் அப்படிப் பரபரவென்று இருக்கும். அவளுடைய பெயரே சற்று விநோதமானதுதான். பொதுவாக இத்தகைய பெயரை ஒருவரும் கேள்விப்பட்டிருக்கமாட்டார்கள். அவளுடைய பெற்றோருக்குப் பிறந்த குழந்தைகள் அனைத்தும் மழலைப்பருவத்திலேயே இறந்துபோயின. இந்தக் கடைசிக் குழந்தையாவது தக்க வேண்டுமே என்ற ஏக்கத்தில் தங்கள் குல தெய்வத்துக்கு நேர்ந்துகொண்டு 'அழல் விழிக்காளி' என்ற அந்தத்தெய்வத்தின் பெயரையே குழந்தைக்கும் வைத்து விட்டார்கள். நாளடைவில் நோய் நொடிகளினின்று தப்பிப் பிழைத்து நல்ல உடல் நலத்துடன் கல்லூரியில் படித்துத் தேறிய பின்பும், தன் உறவினரும், செல்வந்தருமான குணபரனை மணந்து அயல்நாட்டில் குடித்தனம் நடத்தத் தொடங்கிய பின்னரும் கூட அவள் தன் பெயரை மாற்றிக்கொள்ளவில்லை. அதில் அவளுக்கு விருப்பமும் இல்லை; துணிவும் இல்லை. ஆனல் மேலை நாட்டினர், பாவம், அவள் பெயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அதை உச்சரிப்பதற்குள் திணறிப் போவார்கள். சுருக்கமாகக் காளி என்றே அனைவரும் அவளை விளித்தனர்.

தன் பெயருக்கு ஏற்ப அழல்விழியும் கொடுப்பதிலும், கெடுப்பதிலும் நிகரற்று விளங்கினள். அன்றலர்ந்த தாமரையைப் போன்ற முகத்தில் அருளும் ஆர்வமும் ததும்ப அவள் தான தருமங்கள் செய்வதைப் பார்த்தவர்கள் மெய் மறந்துபோவார்கள். தக்கார்க்குத் தக்கபடி உதவிகள் புரிந்து அவர்களைக் கைதூக்கிவிடுவதில் அவளை ஒருவரும் மிஞ்சமுடியாது. அவள் நிறுவிய பல அறக்கட்டளைகள் ஆதரவற்ற பெண்கள், குழந்தைகள், சிறுமியர் என்று ஆயிரம் பேருக்குமேல் புகலிடம் தந்தன. பிறர் நலம் கருதித் தன் உடலை வருத்திக்கொள்வது அவளுக்குப் பிறவியில் வந்த கலையாகும். மாதத்தில் பல நாட்கள் உபவாசம் இருப்பது அவள் வழக்கம். ஆயினும் அமெரிக்க மாதர்களையும் விஞ்சும் வண்ணம் அவள் உடல் நல்லதிடத்துடன் இருந்தது.

அவள் நினைத்தால் தனியளாக ஒரே நேரத்தில் ஐம்பது பேருக்கு நவீன சாதனங்களின் உதவியுடன் அறுசுவை உணவு சமைத்து அன்புடன் பரிமாறுவாள். ஆனல் பிறர் தவறு செய்து தருக்கித்திரிந்தாலோ தன் பெயருக்கு ஏற்ப ஒரு சம்ஹாரத்தாண்டவமே ஆடிவிடுவாள்.

ஒருமுறை அவள் தன்னந்தனியளாக ஒரு பனிப்பிரதேசத்தில் சிக்கிக்கொண்டாள். பத்து நாட்கள் பசிப்பிணியுடனும், வெண்கரடி, ஓநாய்களுடனும் போராடி ஓர் ஓடையைக் கண்டு பிடித்து அதன் வழியே தள்ளாடிச் சென்று கடைசியில் ஒரு குக்கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். அங்கிருந்து தகவல் கொடுத்த பின், அவளை மீட்டுக்கொண்டு போவதற்காக ஒரு ஹெலிகாப்டரில் வந்தவர்கள் அவளுடைய உடல்நிலையைப் பார்த்துவிட்டு 'இந்த உடலைச் சிறிது நகர்த்தினலும் உயிர் போய்விடுமோ'

என்று பயந்துபோய் நின்றார்கள். ஆனால் காளியோ அந்த நிலையிலும் தன் துணிவை விட்டுக் கொடுக்கவில்லை. "என்ன பார்க்கிறீர்கள். நான் இன்னும் சாகவில்லை. ஆனால் இப்படியே வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தீர்களானால் ஒருவேளை சாகக்கூடும்'' என்று அவள் பேசியதைக் கேட்டதும் விதிர்த்துப்போய் அவளை ஆதரவாகப் பற்றி வாகனத்தில் ஏற்றிக் கொண்டு போய் மருத்துவமனையில் விட்டனர். அங்கே ஒரே வாரத்தில் அவள் எழுந்து நடமாடத் தொடங்கியபோது அவளுடைய சிநேகிதிகளைவிட டாக்டர்கள்தாம் அதிகமாக அதிசயப்பட்டனர்.

உடல் உறுதியிலும், மனோதிடத்திலும் தன் கணவருக்கு நிகராக விளங்கினாள் அழல்விழி. ஆனால் அவர் இவளைப் போன்ற அவசரக்காரர் அல்லர். அவருடைய பேச்சிலும், நடையிலும் அமைதி குடிகொண்டிருக்கும். அவரை நேரில் பார்ப்பவர்கள் யாரோ வசதி படைத்த தத்துவ ஞானி என்றுதான் கணிப்பார்களே ஒழிய கோடிக்கணக்கில் பணம் புரளும் நிறுவனங்களின் உரிமையாளர் என்று எடுத்துச் சொன்னாலும் நம்பமாட்டார்கள். அவருடைய நிதானமான போக்கு அத்தகையது. அழல்விழியோ தான் வரும் முன்பே தனது பரிவாரமும், அதிகாரக் குரலுமே தன் வருகையை உணர்த்துமாறு செய்துவிடுவாள். பெருங் கோபத்தினால் அவள் செய்கின்ற செயல்கள் அவள் பைத்தியமோ என்று எண்ணச் செய்து சிலருக்கு அவள் மீது ஒரு நடுக்கத்தை ஏற்படுத்தும். சுருங்கச் சொன்னால் அவள் நல்லவள் மட்டும் அல்லள், வல்லவளாகவும் விளங்கினாள்.

அங்கயற்கண் அமுதான அன்னை சொக்கனுக்கு மாலையிட்ட அன்று, தான் ஆயிரம் ஆயிரம் பேர்களுக்கு விருந்து தயாரித்திருப்பதாக இறுமாப்பு உற்றாளாம். ஆனால் சிவனுடன் திருமணத்துக்கு வந்த குண்டோதரன் என்ற சிவகணம் ஒருவனே அத்தனை உணவையும் உண்டு முடித்தும் அவன் பசி தணியவில்லையாம். தலைவனின் திருவிளையாடல் கண்டு தலை வணங்கி நின்றாளாம் அம்பிகை. அதுபோன்று இத்தனை வல்லமை பெற்றிருந்த அழல்விழி தன் மாமன், மாமி, கணவர் ஆகியோரிடத்தில் மட்டும் மிகவும் பணிவும் பயபக்தியுமாய் நடந்துகொள்வாள். அவளுடைய மதிப்பைப் பெறுகின்ற அளவுக்குத் தகுதியும் திறமையும் அவர்கள் பெற்றிருந்தார்கள் என்பது ஏற்கனவே நமக்குத் தெரிந்ததுதானே!

தன்னைப் போலவே தன் ஒரே மருமகளான சுடரொளியையும் ஒரு தலைவிக்கு உரிய பண்புகளுடன் உருவாக்கி வந்தாள் அழல்விழி. சுடரொளி தன் மேனி நிறத்தில் ஆங்கிலேயரை ஒத்திருந்தாள். வாரந்தோறும் தொலைக் காட்சியில் அவள் நடத்தும் குழந்தைகள் கதம்ப நிகழ்ச்சியை லட்சக்கணக்கானோர் ஆவலுடன் காத்திருந்து பார்ப்பது வழக்கம். அதில் சில வாரங்கள் குறிப்பாக இந்தியநாட்டுக் கலாச்சாரத்தின் பல்வேறு அம்சங்களை அவள் செயல்முறைகளுடன் விளக்கிக் காட்டியவிதம் அமெரிக்க மக்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. சுடரொளியின் கணவன் செவ்வேள் தன் தகப்பனாருடைய நிறுவனங்களிலேயே தக்க பொறுப்புக்களை ஏற்றுப் பணிபுரிந்து வந்தான். அது விஷயமாக விமானத்தில் சென்று கொண்டிருந்த போதுதான் அவனைச் சேர்ந்தவர்களையெல்லாம் துடிக்க வைத்த அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

ஒருநாள் வழக்கம் போன்று தன் பணிகளை ஒரு கிளை நிறுவனத்தில் முடித்துக்கொண்டு ஆயிரத்து அறுநூறு மைல்களுக்கு அப்பால் இருந்த மற்றொரு பெரிய ஸ்தாபனத்திற்கு விமானத்தில் சென்று கொண்டிருந்தான் செவ்வேள். அவனுடைய கோப்புகளில் குறிப்புகள் எழுதிக்கொண்டிருந்தபோது எதிர் இருக்கையில் இருந்து ஒருவன் திடீரென்று எழுந்து நின்றான். அவனைத் தொடர்ந்து இன்னும் மூவர் எழுந்து துப்பாக்கிகளை நீட்டியபடி ஆளுக்கொரு மூலையில் நின்றார்கள். "நண்பர்களே, எங்கள் மீது கோபப்படவேண்டாம். ஆனால் நீங்கள் யாராவது அசைந்தால் சுட்டு விடுவோம். காவலர்களுக்குக் கடுக்காய் கொடுத்துவிட்டு நாங்கள் கொண்டு வந்திருக்கும் இவை பொம்மை வெடிகள் அல்ல. வேண்டுமானால் துணிவு உள்ளவர்கள் சோதித்துப்பார்த்துக் கொள்ளலாம்" என்று எச்சரிக்கை செய்தான் முதலில் எழுந்தவன். "யார் நீங்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று பதறாமல் கேட்டான் செவ்வேள்.

"பணம்! பணம்தான் வேண்டும். அமெரிக்க அரசு முப்பது மில்லியன் (முந்நூறு லட்சம்) டாலர் கொடுத்துவிட்டால் உங்களை விட்டு விடுவோம்" என்று நகைத்தான் அந்தத் தலைவன். "கொடுக்காவிட்டால் என்ன செய்வீர்கள்?" என்று மிரட்சியுடன் கேட்டாள் செவ்வேளின் பக்கத்தில் அமர்ந்திருந்த பிரெஞ்சு நாட்டுப் பெண்மணி. "ஒன்றும் செய்யமாட்டோம். விமானத்தைக் கீழே இறக்குவோம். பிறகு வெடிவைத்து உங்களையெல்லாம் மேலே அனுப்புவோம். அப்பொழுதுதானே எங்களை அலட்சியப்படுத்தத் துணிந்த உங்கள் அரசுக்கு நல்ல புத்தி வரும்?'' என்று சிரித்துக்கொண்டே கூறினான் 'ஸீகல்' என்று அழைக்கப்பட்ட அந்தத் தலைவன். அவ்வளவுதான், உடனே 'ஓ' வென்று அலறிக்கொண்டு ஒருவரையொருவர் அண்டிநிற்க முயன்றனர் பயணிகள் எல்லாரும். "அவரவர் இடத்தில் அமைதியாக உடனே உட்காருங்கள். இல்லாவிட்டால் உயிருக்கு ஆபத்து" என்று கூவிக்கொண்டே துப்பாக்கியை வெடித்தான் ஸீகல். ஸைலன்சர் பொருத்தப்பட்டிருந்ததால் 'டப்' என்ற சிறு ஓசையுடன் கிளம்பிச் சீறிக் கூரையைப் பொத்துக்கொண்டு சென்றது ஒரு குண்டு. பீதி வசப்பட்ட பயணிகள் கைகளைக் கட்டிக்கொண்டு அவரவர் இருக்கைகளில் அமர்ந்தனர்.

காலம் ஓடிக்கொண்டிருந்தது. ஸீகல் நேரே விமானியிடம் சென்றான். "நான் சொல்கிறபடி விமான தளத்துக்குச் செய்தி அனுப்புங்கள். முட்டாள் தனமாக ஏதேனும் செய்தால் முந்நூறு உயிர்களுக்கு நீங்கள்தாம் பொறுப்பு ஏற்கவேண்டும்" என்று எச்சரித்தபடியே ஒரு காகிதத்தை எடுத்துக்கொடுத்தான். ரேடியோவைத் திருப்பி அதில் உள்ள செய்தியை அப்படியே படித்தார் விமானி: "எங்கள் விமானம் பெயர் தெரியாத இடத்திற்குக் கடத்தப்படுகிறது. குடியரசுத் தலைவர்கள் மூன்றுபேர் கூடியிருந்தபோது அவர்களைக் கொலை செய்ய முயன்று கைது செய்யப்பட்டிருக்கும் வால்ரஸ் கூட்டத்தாரை உடனே விடுவிக்க வேண்டுமாம். தவிர முப்பது மில்லியன் டாலரையும் கொடுத்துக் கடத்தல்காரர்களுக்கு எந்தவித ஆபத்தும் நேரிடாமல் அவர்கள் அடுத்த நாட்டுக்குச் செல்ல ஒரு விமானத்தையும் கொடுத்து உதவவேண்டுமாம். இல்லையேல் முந்நூறு பயணிகளுக்கும் ஆபத்து என்று எச்சரிக்கிறார்கள்." இதைப்படித்து முடித்ததும் ஓரக்கண்ணால் கவனித்தார் விமானி. ஸீகல்லின் கவனம் அந்தப் பொறியின் பல்வேறு பகுதிகளின் நிலவரத்தை அளக்கும் கருவிகளின்மீது பதிந்திருந்தது. வேகமாக ஏதோ மனக்கணக்குப் போட்டுக்கொண்டிருந்தான் ஸீகல். இதுதான் சமயம் என்று அவன்மீது பாய்ந்து துப்பாக்கியைப் பிடுங்க யத்தனித்தார் விமானி. உடனே குருட்டாம் போக்கில் அவன் சுடத் தொடங்கினான். அடுத்த கணம் தோட்டா அவருடைய தொண்டையில் பாய்ந்தது. மல்லாந்து விழுந்தார் விமானி. முக்கிய பகுதிகளில் குண்டு வெடித்ததால் விமானத்தின் சீரான இயக்கம் தடைப்பட்டு ஒரு பக்கத்து இன்ஜினும் இறக்கையும் எரியத்தொடங்கின. இத்தனை நேரம் சொர்க்கலோகமாக இருந்த அந்த விமானம் இப்பொழுது நரகத்தைவிடக் கொடியதாய் மாறிவிட்டது. 'சொத்துச் சுகம் எதுவும் வேண்டாம். உயிர் பிழைத்தால் போதும்' என்று ஓலக்குரலில் அழுதனர் பயணிகள். விமானம் பூமியை நோக்கிப் பாய்ந்து வந்தது. அடுத்த ஐந்தாவது நிமிடம் பரந்த கடல்வெளியில் பயங்கரமான சப்தத்துடன் விழுந்து சிறிது சிறிதாக மூழ்கலாயிற்று.

குணபரன் வீட்டிற்குச் செய்தி தெரிவிக்கப்பட்டபோது இரவு இரண்டு மணி இருக்கும். ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்தெழுந்த மூவர் நிலையும் மூன்று விதமாக இருந்தது. "என் பிள்ளை இறந்தாபோய்விட்டான்? அவனோடு முன்னூற்றுப்பத்து உயிர்களும் மாய்ந்துவிட்டனவா? எந்தக் குற்றம் செய்ததற்காக எனக்கு இவ்வளவு பெரிய தண்டனை?'' என்று கண்ணீர் மல்கச் சிந்தித்தார் குணபரன். "என் கணவர் இறந்துவிட்டார். என் வயிற்றில் இருக்கும் குழந்தை இனி எனக்கு ஒரு பொருட்டன்று. நானும் அவரோடு போவேன்" என்ற திடமான முடிவோடு தன்னுடைய மரண யாத்திரைக்குத் தயாரானாள் சுடரொளி. "என்ன ஆச்சரியம்! சிறுவயதில் எத்தனையோ

தவசிகளை அடுத்து நமது நன்னடத்தையால் பல மந்திர சித்திகளை வரமாகப் பெற்றோம். ஆனால் பெற்ற மகன் இவ்வளவு விரைவில் பற்றி எரியப் போகிறான் என்ற விஷயத்தை நம்மால் தெரிந்துகொள்ள முடியாமல் போயிற்றே" என்ற எண்ணத்தால் கல்லாய்ச் சமைந்து போய் நின்றாள் அழல்விழி. இந்தியா வில் தங்களுக்கு வேண்டியவர்களுக்கெல்லாம் செய்தி தெரிவித்து விட்டு விமான நிறுவனத் தார் அவசரமாக ஏற்பாடு செய்து கொடுத்த தனி விமானத்தில் விபத்து நடந்த இடத்திற்கு அருகாமையில் இருந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தனர் மூவரும். எவ்வளவுதான் முயன்று தேடினாலும் விமானத்தின் தடையமோ, கடலில் மூழ்கியவர்களின் உடல்களோ எது வும் அதுவரை கிடைக்கவில்லை என்ற செய்தி அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே ஒரு மோட்டார்ப் படகு அமர்த்திக்கொண்டு கடலின் பரந்த வெளியெங்கணும் தேடித் திரிந் தனர் குணபரன் குடும்பத்தார். இவர்களைப் போலவே இன்னும் பலரும் அழுதகண்ணும், புலம்பிய வாயுமாகக் கடலில் ஆங்காங்கே சிறு சிறு கப்பல்களில் சுற்றிக் கொண்டிருந்தனர். அன்று இருட்டிய பிறகு புயற்காற்றோடு பெரு மழை பெய்யத் தொடங்கியதால் அனைவரும் கரைக்குத் திரும்பினர்.

இதுவரை அதிர்ச்சியினால் மரத்துப் போயி ருந்த சுடரொளிக்கு அப்பொழுது தான் சில விஷயங்கள் நினைவுக்கு வந்தன. விமானம் காணாமற்போன இடத்திற்குப் பெர்முடா முக் கோணம் என்று பெயர். நாளதுவரைபல கப்பல்கள் அந்தக் குறிப்பிட்ட பகுதியில் பல் வேறு ஆண்டுகளில் காணாமற் போயிருந்தன. பல நாட்டு அரசுகளும் எவ்வளவோ பொருட் செலவு செய்தும், அவற்றின் கதியைப்பற்றி ஒன்றும் அறிய முடிந்ததில்லை. அந்தப் பகுதி யில் விபத்துக்கு உள்ளானால் விமானங்களும் நாடு திரும்புவதில்லை; அவற்றின் விமானிகள் அனுப்பும் கடைசிச் செய்திகளிலிருந்து அவை எத்தகைய ஆபத்தை எதிர் கொண்டன என் பதையும் தெளிவாக அறிய முடிந்ததில்லை. இப்பொழுது சுடரொளிக்கு ஒரேஒரு வழிதான் தென்பட்டது. ஊர்திரும்பி, குழந்தை பிறக் கும் வரை பொறுமை காத்துப் பின்னர் தன் கணவரின் வாரிசை மாமியிடம் ஒப்படைத்து விட்டுத் தான் திரும்பி இங்கே வந்து அவரைத் தேடும் முயற்சியிலேயே தன் உயிரை விட வேண்டும் என்று தீர்மானித்தாள்.

ஆனால் இறைவனின் திட்டம் வேறுவிதமாக இருந்தது. மறுநாள் வானம் தெளிந்த பிறகு குணபரன்,அழல் விழி இருவரும் சுடரொளியை விடுதியிலேயே இருந்து ஓய்வு எடுக்குமாறு கூறிவிட்டுப் பெரிய படகில் கிளம்பிச் சென்ற னர். அவர்கள் கிளம்பிச் சென்ற இருபது மணி நேரம் கழித்து அவளுக்கு ஒரு செய்தி வந்தது. ஒரு பெரிய சுறாமீன் தாக்கியதால் படகு குடைசாய்ந்தது என்பதுதான் அந்தச் செய்தி. இதைக் கேட்டதும் தன்னையும், தன் நிலையையும் அடியோடு மறந்துபோனாள் சுடரொளி. ஒரு சிறிய விமானத்தை வாடகை பேசித் தானே அதைச் செலுத்திக்கொண்டு கிழக்குத் திசையில் பறக்கலானாள். மிகவும் ஆபத்தான பகுதி என்று பொதுமக்களை அரசு அநுமதிக்காமல் ஒதுக்கி வைத்திருந்த பகுதி யிலேயே விமானத்தைச் செலுத்தினாள். விமா னம் ஓட்டுதலிலும், ஆகாயக் குடை விரித்துக் குதிப்பதிலும் அவள் பெற்றிருந்த பயிற்சிக ளெல்லாம் அந்த நேரத்தில் அவள் நரம்புகளில் ஒரு வீரியத்தையும், தசைகளில் ஆவேசத்தை யும் ஏற்படுத்தின. திசைமானியைக் கவனித்த வாறு நூற்றைம்பது மைல்களைக் கடந்துசென்ற பிறகுதான் ஓர் அதிசயத்தைக் கண்டாள். அங்கே அதிக உயரத்திலிருந்து பார்த்தால் தெரியாத அளவுக்கு சின்னஞ்சிறிய ஒரு திட் டுக் காணப்பட்டது. அதில் பாறைகளைத் தவிர வேறு புல் பூண்டு ஒன்றும் இல்லை. கடற்பாசி படிந்து படிந்து அதன் நிலப்பகுதி கடல் நிறத் திலேயே காணப்பட்டதால் அருகில் நெருங்கி ஊன்றிக் கவனிப்பவர்களுக்குத்தான் அந்தத் திட்டுப் புலப்படும் போலிருந்தது. அவள் செலுத்தி வந்தது ஹோவர் கிராப்ட் வகையைச் சேர்ந்த வாகனம். ஆகையால் கடல் நீரின்மீதே அதை வேகமாகச் செலுத்தித் தரைப்பகுதியை அடைந்தாள். இந்தச் சத்தத்தைக் கேட்டுப் பாறைகளின் இடுக்குகளுக்கிடையே உலைந்து போய்க் கிடந்தவர்கள் சிலர் ஓவென்று கூச்ச விட்டுக்கொண்டு எழுந்தோடி வந்தார்கள். என்ன அதிசயம்! சுடரொளியின் மாமனும்,

மாமியும் அந்தச் சிறிய கூட்டத்தில் இருந்த னர். சுருமீன் கடித்த அடையாளங்களுடன் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த குணபரனை மூன்று பேர் சேர்ந்து தூக்கிக்கொண்டு வந் தார்கள்.

சுடரொளியைக் கட்டிப் பிடித்துக்கொண் டாள் அழல் விழி. "இந்த நிலையில் நீ இப்படி யெல்லாம் அசட்டுக் காரியம் செய்யலாமா அம்மா" என்று கடிந்துகொண்டாள். "மாமி, அங்கே தனிமையில் எனக்கு வந்த வெறியில் சக்தி இருந்திருந்தால் உலகத்தையே அழித் திருப்பேன். உங்களை மீண்டும் பார்ப்பேன் என்று நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை" என்று கதறிக்கொண்டே சொன்னாள் சுடர். "பயப்படாதே அம்மா. எல்லாம் நல்லபடி முடியும் பார்" என்று அவளைத் தேற்றினாள். அழல் விழி. "எங்களுக்கு என்ன நேர்ந்தது தெரியுமா? சுருமீன் தாக்கியதால் படகு கவிழ்ந் ததுமே எங்கள் ஆயுள் அவ்வளவுதான் என்று எண்ணிக்கொண்டோம். அப்பொழுது இதோ இந்தச் சிவப்புச்சட்டை அம்மாவையும், அவர் மகனையும் சுருமீன் தாக்கத் தொடங்கியது. இவர்களைக் காப்பாற்றப் போய்த்தான் அவ ரும் ஆபத்தில் சிக்கிக்கொண்டார். எப்படியோ இந்த வாலிபனும் அவரும் சேர்ந்துதான் சுரு வைக் கொன்று எல்லாரையும் மீட்டனர். அப் பொழுதுதான் கூட்டங் கூட்டமாக டால்பின் கள் வந்தன. எங்களைச் சிறிது சிறிதாக முட்டி இந்தக் கரையின் பக்கமாய்க் கொண்டுவந்து சேர்த்தன. டால்பின் மீது படுத்துக்கொண்ட தால்தான் உன் மாமாவும் உயிர் பிழைத்தார்" என்று சொல்லி முடித்தாள். அதற்குள் அந்த வாலிபனும் சுடர் வந்து சேர்ந்த விமானத்திற் குள் சென்று அதிலிருந்த ரேடியோ தொலை பேசி மூலம் கடற்படை அதிகாரிகளுடன் தொடர்புகொண்டு செய்தியைத் தெரிவித் தான். சிறிதுநேரத்தில் மீட்புப் படை வரும் என்று தெரிவிக்கப்பட்டது.

ஆனால் சுடர் அதுவரையில் தாக்குப் பிடிப் பாளா என்பது சந்தேகமாயிற்று. அவள் உடல் இருந்த நிலையில் அதீதமாக அதைவேலை வாங்கியதால் இப்பொழுது நோவு எடுத்துத் துடிக்கத் தொடங்கினாள் சுடர். அழல்விழிக்கு அவள் இழந்திருந்த தைரியமும், ஆற்றலும் மீண்டும் திரும்பின. அவசரம் அவசரமாக அங்கிருந்தோரிடம் துணிகளை வாங்கி மறைப்பு ஏற்படுத்தித் தன் மருமகளுக்குப் பிரசவம் பார்த்துக்கொண்டே ஏதோ மந்திரங்களைத் தொடர்ந்து முணுமுணுக்கலானாள். சிறிது நேரத்தில் தூரத்தில் பரபரப்பாய் நின்று கொண்டிருந்தவர்கள் வாழ்த்தொலியும், கர வொலியும் எழுப்பிக் களிக்கூத்தாட அந்தச் சின்னஞ் சிறிய தீவில் இரண்டு குழந்தைகள் பிறவி எடுத்தன. பிறந்த குழந்தை மூச்சுக் காற்றுக்காக ஏங்கி அழுவதுதான் இயற்கை நியதி. ஆனால் இந்தக் குழந்தைகளோ வாய் இதழ்களை மலர்த்தி பூ விரிந்தாற்போல் சிரித்தன. அவற்றின் அங்க அடையாளங் களைப் பார்த்த அழல்விழி பிரமித்துப்போனாள். இரண்டு குழந்தைகளுக்கும் உள்ளங்கையில் சங்கு போன்ற வடிவமும், பாதத்தில் சக்கரம் போன்ற அடையாளமும் தெளிவாகத் தெரிந் தன. தங்கத்தினால் செய்த தாமரைகள்போல் மேனி மினுமினுத்தது. வாயில் இப்பொழுதே பற்கள் முளைவிட்டிருந்தன. கண் மலர்களை அக லத்திறந்து சுற்றும் முற்றும் பார்த்தன அந்தத் தெய்வக் குழந்தைகள். வடக்குத் திசையை நோக்கித் தங்கள் பெருவிரல்களை மீண்டும்மீண் டும் நீட்டிக் காட்டின. அதில் ஏதோ குறிப்பு இருப்பதாகத் தோன்றியது சுடரொளிக்கு. சிரித்த முகத்துடன் தன் மாமியைக் கைகூப்பி வணங்கினாள். அவள் நெற்றியில் முத்தமிட் டுத் தலையை வருடிக்கொடுத்தாள் அழல்விழி. "சுடரொளி, உன் குழந்தைகள் சாதாரண மானிடப் பிறவிகளாகத் தோன்றவில்லை அம்மா எனக்கு. நடப்பதெல்லாம் ஏதோ தெய்வீகத் திட்டங்கள் தாம் என்று நினைக்கிறேன்" என் றாள். கருத்தரித்தது முதல் தன் உடலிலும் உள்ளத்திலும் தோன்றிய இனம் புரியாத உணர்வுகளின் பொருள் இப்பொழுதுதான் தெளிவாகப் புரிந்தது சுடரொளிக்கு. அந்தத் தெய்வக் குழந்தைகளை அகங்குழைய, உடல் நெகிழ அணைத்து, அங்கமெல்லாம் அன்னை அகிலாண்டேஸ்வரியின் வடிவமாகி, சிந்தை யெல்லாம் சிவமயமே தானாகி, தன் மார்பில் ஊற்றெடுத்த அமுதத்தினால் அபிஷேகம் செய் யலானாள். குணபரன், அழல்விழி, சுடரொளி மூவர் கண்களிலும் நிற்காது பெருக்கெடுத்த

கங்கையென்னும் புனித நீர் தீர்த்தங்களிலெல்லாம் தலைசிறந்ததான மகாதீர்த்தத்தை அங்கே தோற்றுவித்தது. இதைக்கண்டு அங்கு நின்றிருந்தோர் அனைவரும் மெய் சிலிர்த்துக் குரல் கம்பித்துக் கைகூப்பித் தொழுது மண்டியிட்டனர். காற்று இதமாக வீசியது. கடல் அலைகள் வெள்ளித் துணுக்குகளாய்ப் பளபளத்து மின்னொளி வீசின. கடற்பிராணிகள் கரையேறிக் குழந்தைகளைக் கண்ணுற்றுக் கற்சிலைகளாய் மாறிக் கண்கொட்டாமற் பார்த்துக் கொண்டிருந்தன.

சிறிது நேரத்தில் கப்பற்படையினர் விமானங்களில் வந்து சேர்ந்தனர். நடந்தவற்றையெல்லாம் பார்த்தும் கேட்டும் தெரிந்து கொண்டனர். ஆனால் அவர்களால் இதையெல்லாம் நம்பத்தான் இயலவில்லை. அவர்களை நம்ப வைப்பதற்கே போலும் மற்றும் ஒரு நிகழ்ச்சி அங்கே நடந்தது.

கடலின் அடிமட்டம் வரை நீந்திச் செல்லக் கூடிய தனிப்பயிற்சியும் தனிஉடையும் கொண்டிருந்த சில மாலுமிகள் நீரில் பாய்ந்து உள்ளே அமிழ்ந்து வேறு உடல்கள் இருக்கின்றனவா என்று தேடிப் பார்த்தார்கள். அவர்களுள் மூன்றுபேர் சென்ற இடத்தில் ஒரு பெரிய மலைத்தொடர் குறுக்கிட்டது. நீந்திக்கொண்டே அதைக் கடந்து சென்று அதன் சிகரங்களைச் சுற்றியபோது பொன்னைவிட விலையுயர்ந்த பல தாதுப்பொருள்கள் அங்கே குவிந்து கிடக்கக் கண்டார்கள். இண்டு இடுக்குகளில் குகைகளுக்குச் செல்லும் வழிகளையும் கவனித்தார்கள். இன்னும் சிறிது ஆழம் நீந்திச் சென்றபோது இதுவரை மனிதன் கண்டும், கேட்டுமிராத பலவகை அதிசயப் பிராணிகள் அங்கே இயல்பாய்ச் சுற்றிக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். மிகப்பெரிய ஒரு பாறையைக் கடந்த போது அவர்கள் கண்ட காட்சியில் மூச்சே ஒரு கணம் நின்றுபோயிற்று அவர்களுக்கு. ஒரு முகட்டின்மீது உயிருடன் அமர்ந்து கொண்டு தியானத்தில் ஆழ்ந்திருந்தான் செவ்வேள். தன் தாயினிடம் பெற்றிருந்த யோகப் பயிற்சியினால் அவன் நிதானமாக மூச்சுவிட்டுக் கொண்டிருந்தான். செயற்கையான பிராண வாயு குழல்களிலிருந்து வருவதுபோல் அவனைச்சுற்றி அமைந்திருந்த விநோதமான தாவரங்களிலிருந்து தூய காற்றுத் தோன்றி அந்த இடத்தையே நிறைத்திருந்தது. அவனை எழுப்பித் தியானத்தைக் கலைப்பதற்குள் போதும் போதுமென்று ஆகிவிட்டது அந்த மாலுமிகளுக்கு. அவன் உலக நினைவு வரப்பெற்றதும் கடல் நீருக்கடியில் எழுதக் கூடிய ஒரு பலகையில் சுருக்கமாக விஷயத்தை எழுதித் தெரிவித்தனர். பின்னர் நால்வரும் சேர்ந்து மேற்பரப்பை நோக்கி நீந்தத் தொடங்கினர்.

தரைப்பகுதியை அடைந்ததும் செவ்வேள் பாய்ந்து சென்று தன் பெற்றோர்களின் அடிமலர்களில் வீழ்ந்து "அம்மா, அப்பா" என்று கதறினான். அழல்விழி அவனை ஆதரவாக அணைத்து அவன் தலையைக் கோதிவிட்டாள். "அம்மா, நான் எப்படி உயிர் பிழைத்தேன், எப்படி நினைவை இழந்து தியானத்தில் அமிழ்ந்தேன் என்பது ஒன்றும் எனக்குத் தெரியாது. உங்களையெல்லாம் காப்பாற்றும்படி வேண்டியபடி மூச்சுப்பயிற்சி செய்து கொண்டே நீரில் மூழ்கியது ஒன்றுதான் என் நினைவில் நிற்கிறது" என்றான். "நீயே யோசித்து உன் எண்ணப்படி நீ செய்திருந்தால் உனக்கு நினைவில் இருக்கும் அப்பா. இதெல்லாம் ஏதோ நமக்குப் புரியாத தெய்வீகத் திட்டங்கள். நம்மைக் கருவிகளாக வைத்து ஆண்டவன் ஏதோ பெரிய செயல்களை நிறைவேற்ற ஆரம்பித்திருப்பதாகத் தோன்றுகிறது. அதற்கு அடையாளமாக வந்து உதித்திருக்கும் உன் ஞானக்குழந்தைகளை அங்கே பார்" என்று கைகாட்டினாள் அழல்விழி. அங்கே அருணன் இரண்டு உருவங்களாகக் காட்சி தந்துகொண்டிருந்தான். கிழக்கு வானத்தில் மற்றொரு அருணனும் விகசித்துக்கொண்டிருந்தான். அனைவரும் விமானத்தில் ஏறினர். நீரைக் கிழித்துக் கொண்டு விர்ரென்று மேலே எழுந்து பறந்தது விமானம். வைத்தியர்கள் தங்கள் சிகிச்சையைத் தொடர்ந்தனர். தன் கணவர் பிழைத்து விட்ட இனிய செய்தி உட்படஎல்லாவற்றையும் தொலைபேசியில் தொடர்பு கொண்டு சிவனடிக்குத் தெரிவித்தாள் அழல் விழி. சிவனடியும், அறம் வளர்த்த நாயகியும் தங்களை இழந்து சிவத்தில் லயித்தனர். (முதற்பகுதி முற்றும்)

---

# சனாதன தர்மத்தின் சிறப்புகள்

( திரு. V. S. நரசிம்மன் )

**கர்ப்பக்கிரஹம்**

இறைவனுக்கு அருகே நெருங்கும்போது, கர்ப்பக்கிரஹம் அதிகம் இருள் சூழ்ந்து இருக்கின்றது. ஆத்ம சாதனத்தில் பக்குவம் பெறும் வரை அகத்தே இருள் நிறைந்து கிடக்கும். நமது கண்களை மூடிக்கொள்ளும்போது புறக் காட்சி தெரியாது. அதுபோன்று நம் உள்ளத்தில் அக்ஞான இருள் படிந்து இருக்கின்றது அன்றோ? அதற்குப் புற வடிவம் தருவதற்காகக் கர்ப்பக்கிரஹம் அதிக வெளிச்சமின்றி அமைக்கப்பட்டுள்ளது. அங்குத் திரையும் போடப்பட்டிருக்கின்றது. மூர்த்தியை நாம் தரிசிக்க இயலாது காத்திருக்கின்றோம். அஞ்ஞானத்திரை அகலும்வரை அகத்தே ஆண்டவன் தரிசனம் கிட்டாது. அதன்பின் மணி அடிக்கப்பட்டு, திரை நீக்கப்பட, தீப ஆராதனை நடைபெறுகின்றது. முறைப்படி சாதனம் செய்பவரின் உள்ளத்தில் அநாஹததத்வனி என்ற இனிய ஓசையைக் கேட்கலாம். தீப ஆராதனைக்கு ஏற்பப் பேரொளிப் பிழம்பாகத் திகழும் ஆன்ம சைதன்யத்தை உணரலாம். 'இருளில் இருந்து என்னை வெளிச்சத்திற்கு அழைத்துச் செல்—தமஸோ மா ஜ்யோதிர் கமய' என்று வேதங்கள் கூறும் பிரார்த்தனைக்கு வடிவமாக அமையும் சடங்கு ஆலய வழிபாடு. எந்த நிலையில் உள்ளவரும் நன்கு புரிந்துகொண்டு கடைப்பிடிக்க ஏற்ற இந்தச் சடங்கின்மூலம் ஹிந்துமதம் மக்களிடையே வேரூன்றித் திகழ்கின்றது.

**விக்கிரஹ வழிபாடு—ஐயமும், விளக்கமும்**

ஆலய வழிபாடு சடங்குகளில் ஒன்றுதான். கிரியைகளில் புறவடிவம் முக்கியமன்று; அதன் தத்துவமே முக்கியமானது. அமெரிக்காவில் சுவாமி விவேகானந்தரிடம் ஒருவர் கேட்டார்: "மிகவும் உன்னதமான கோட்பாடுகளை உள்ளடக்கிய வேதாந்தத்தில் சிறப்புற்று விளங்கும் நீங்கள் ஏன் கல், செம்பு, மரத்தால் ஆன விக்கிரஹங்களை வழிபடுகின்றீர்கள்?" சுவாமிஜி பதில் தந்தார்: "நாங்கள் வழிபடுவது விக்கிரகங்களை அல்ல; அவை உணர்த்தும் தத்துவங்களையே" - "We are not idol worshippers, but Ideal worshippers." எனவே அடையாளச் சின்னத்தைப் பெரிதுபடுத்தக் கூடாது; அது எடுத்துக் காட்டும் லட்சியத்தை உள்ளத்தில் உய்த்து உணரவேண்டும்.

ஹிந்து மதம் எல்லாப் படித்தரத்தில் உள்ளவர்களும் முன்னேறவேண்டும் என்ற நோக்கம் கொண்டுள்ளது. அவரவர் தகுதிக்கு ஏற்பத் தத்துவத்தைக் கிரகித்து, வாழ்க்கையில் சமய நெறிகளைப் பின்பற்ற வேண்டும். தரிசனம், இதிகாசம், புராணம், கிரியை—என்று நான்கு பெரும் பிரிவுகளைக் கொண்டதாய்த் திகழும் சனாதன தர்மம் ஒன்றே மனித இனத்திற்கு யாண்டும் ஏற்கத்தக்க சமய நெறியாகின்றது.

**ஹிந்து மதம்—ஒரு வாழ்க்கை நெறி**

'Hinduism is a way of living — ஹிந்து மதம் என்பது ஒரு வாழ்க்கை நெறி' என்றார் சுவாமி விவேகானந்தர். "ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கை சமய ஒழுக்கத்தின் நடைமுறைச் சின்னமாகும். "The life of Sri Ramakrishna is religion in practice" என்று மஹாத்மா காந்திஜி குறிப்பிட்டார். தத்துவத்தை நடைமுறையில் செயல்படுத்துவது 'யோகம்' ஆகின்றது. 'யுஜ்' என்ற வினைச் சொல்லில் இருந்து 'யோகம்' என்ற சொல் வருகின்றது. யுஜ் என்றால் 'இணைப்பது' என்று பொருள். ஜீவாத்மா-பரமாத்மா இணைப்பு யோகத்தால் நிகழ்கின்றது.

**ராஜயோகம் — அனைவருக்கும் பொருத்தமானது (Universal)**

பதஞ்சலி மஹரிஷி அருளிய யோக சூத்திரங்கள் ராஜயோகத்தின் அடிப்படை நூல். இதில் கடவுளைப்பற்றிய சர்ச்சையே கிடையாது. மதம், தேசம், வயது, பால்வேற்றுமை எதையும் இது பொருட்படுத்துவது கிடையாது. ஒருவன் தன்னைத்தானே கட்டுப்படுத்தி, உடலையும், மனதையும் கட்டி ஆள்வது எங்ஙனம் என்பதை மட்டுமே இந்நூல் ஆராயும். இத்தகைய புலனடக்கமும், மன அடக்கமும் உன்னத லட்சியங்களை அடைவதற்கு உரிய வழிமுறைகளாகும். இது உலக மக்களுக்குப் பாரதம் உவந்து அளித்த பெரும் கொடை

யாகும்.

**Adolescent period** என்று குறிப்பிடப்படும் பருவ வயதில் புலனடக்கம் இன்றியமையாத தாகும். அது இல்லாதவர்கள் சிறந்த குடி மக்களாக உருவாக இயலாது. இளம் வயதி னரின் புலனடக்கத்தைக் காப்பது சமுதாயத் தின் கடமையாகும். பழங்காலத்தில் குரு குலங்கள் இக்கடமையை நிறைவேற்றின. இக்காலத்திலோ சமூகமே பருவ வயதினரைப் பாழ்படுத்தி வருகின்றது.

புலனடக்கத்துடன் யோகப் பயிற்சியில் ஈடு படுபவர்களுக்கு நாளடைவில் 'ஞானக்கண்—Intuition' உண்டாகின்றது. இதனை 'மேதை நாடி' என்றும் இதனை அடையப் பெற்றவனை மேதாவி என்றும் குறிப்பிடுவர். அந்நிலையில் சாதகன் 'தான் சரீரமல்லன்; ஆத்மன்' என்று உணர்கிறான். ஸ்ரீராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்ததும், பாண்டவர்கள் பதின் மூன்று ஆண்டுகள் வனத்திலும், மறைவாக ஒருவருடமும் வாழ்ந்ததும் இந்தத் தத்து வத்தை விளக்கும் சான்றுகளாம்.

அமிர்த நிலையை அடைவதே ஆத்ம ஞானம் ஆகும். அந்த ஆத்மனை விவரிக்கும்போது பக வத் கீதை "இதைக் கத்தியால் வெட்ட முடி யாது, காற்றினால் உலர்த்த முடியாது; நெருப் பால் எரிக்க முடியாது." (அத்-2சுலோகம்-23) என்று உரைக்கின்றது. கட்டுப்பாடு எது வும் இன்றிச் சரீர அபிமானத்தில் ஊறி இருக்கும்வரை ஒருவன் துன்பத்திற்கு ஆட்படு வான். எனவே அமிர்த நிலையை எய்தச் சரீர உணர்ச்சியைத் துறத்தல் அவசியம். ராஜ யோகம் இந்த அடிப்படைத் தகுதியை ஆத்ம சாதகனுக்கு அளிக்கின்றது.

**கர்மயோகம் வினைப்பயன் என்ற கொள்கை (Doctrine of Karma)**

மனிதனின் வாழ்வு கர்மத்தில் துவங்கு கிறது. அவன் 'பாவி' அல்லன்; அவன் 'கர்மி'–கர்மம் செய்பவன். பாவம், புண்ணியம் என் றால் என்ன? எதிர்மறைச் செயல் பாவம்; உடன்பாட்டுச் செயல் புண்ணியம். (Negative Karma is sin; positive is punya). 'சரீரம், மனம், ஆத்மா ஆகியவற்றில் எது உன்னை வலிவு இழக்கச் செய்கின்றதோ அது பாவம்; தயக்கமின்றி நஞ்சை ஒதுக்குவது போன்று அதை உதறி எறி. எது சரீரம், மனம், ஆத்மா ஆகியவற்றில் உன்னை மேன்மை அடையச் செய்கின்றதோ அதுவே புண்ணியம். தயக்க மின்றி அதைவிடாப் பிடியாகப் பிடித்துக் கொள். ஒரே கர்மத்தில் பாவம், புண்ணியம் இரண்டிற்கும் இடம் உள்ளது. கர்மா தன் அள வில் பாவமோ, புண்ணியமோ அன்று.

**கர்மம் ஒரு வாய்ப்பு–அது தளை அன்று**

செயல்கள் அனைத்தும் கர்மம். உண்ணல், மூச்சு விடுதல், உணவை ஜீரணம் செய்தல், உறங்குதல், சிந்தனை செய்தல் போன்ற செயல் கள் அனைத்தும் கர்மமே. இத்தகைய பல் வேறு கர்மங்களின் மூலம் நாம் நம்மைத் திருத் திப் பண்படுத்திக்கொள்கின்றோம். நமது தற்போதைய நிலைக்குக் காரணம் பழவினை; அடுத்து வரும் நிலையைச் சீராக அமைப்பது தற்போது நாம் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் செயல்களே என்பதில் ஐயமில்லை. எனவே கர்மம் நமக்கு அளிக்கப்பட்ட சிறந்த வாய்ப்பு ஆகின்றது. "என்ன செய்தாலும் உனக்கு விடிவு கிடையாது" என்று கர்மவினை நம்மைத் தளையிட்டுப் பிணிப்பது கிடையாது. மாறாகக் கைதேர்ந்த சிற்பி ஒருவன் அழகிய சிலையைச் செதுக்குவதுபோன்று,கர்மத்தின் மூலம் தனது வாழ்வை அமைக்கக்கூடிய சிற்பியாக மனிதன் இருக்கின்றான்.

**கர்மயோகம்**

தனக்குத் தரப்பட்ட கடமையை - ஸ்வதர் மத்தை நன்கு செய்வதும் 'இதுவும் இறைவழி பாடு' என்ற தூய பாவனையுடன் வினையாற்றி முடிப்பதும் கர்ம யோகம் ஆகின்றது. கர் மத்தை முறைப்படி செய்யாது இருப்பது தனக் கும், மற்றவர்களுக்கும் துன்பத்தைத் தரும். குறுகிய மனப்பான்மை, கீழ்த்தரமான போக்கு, தன்னலம், மதவெறி, தீவிரவாதம், மற்றவரை மேய்த்தும் ஏய்த்தும்ஆளுகின்ற மனப்பான்மை போன்ற தீய விசைகள் அசுர இயல்புகளையே அதிகரிக்கச் செய்யும். இது பாப கர்மம். தியாக உணர்வும், சேவை மனப்பான்மையும், பணிவும், பிறர்நலம் பேணும் பாங்கும் மகிழ்ச் சியைத் தரும். இது புண்ணிய கர்மம்.

ஒரே கர்மம் மனப்பான்மையைப் பொறுத்து ஒருவரால் பாவமாகவும், மற்றொருவரால் புண் ணியமாகவும் கருதப்படலாம். புண்ணியம்,

பாவம் இரண்டும் சார்புடையவை (relative). உதாரணமாகத் திருடுவது பாவம், தவறான செயல். ஆயின் முறையற்ற நெறியில் கொள்ளை லாபம் அடித்தோ, லஞ்சம் வாங்கியோ ஒருவன் குவித்துள்ள செல்வத்தை அபகரித்து, ஏழை எளியவர்களுக்கு மற்றொருவன் வழங்கினால் அது பாவம் என்று வலியுறுத்திக் கூற முடியுமா? எனவே தன்னலத்தை எந்த அளவிற்கு ஒருவன் துறந்து கர்மம் செய்கிறான் என்பதே சரியான அளவுகோல் ஆகின்றது.

கர்மயோகத்தின் மூலம் ஆணவம் அகற்றப்படுகின்றது; இறைவனின் பெருமைக்காகவே செயல் செய்யப்படுகின்றது. எனவே சாதகன் தூய்மை அடைந்து பண்படுகின்றான். கர்மத்தின் விளைவு எப்படி ஆயினும் அவன் பாதிக்கப்படுவதில்லை. 'பத்ம பத்ரம் இவ அம்பஸா— தாமரை இலைத் தண்ணீர் போல்' என்பது கர்மயோகிக்குச் சிறந்த ஒப்புவமையாகும். குளத்தில் அமிழ்ந்து இருந்தாலும், தாமரை இலையில் தண்ணீர் ஒட்டுவதில்லை. அத்தகைய சிறந்த பற்றற்ற பண்பே கர்மயோகியின் தனிச் சிறப்பு. பலனில் பற்று இல்லாது இருப்பினும், வினையாற்றுவதில் அவன் திறமை குன்றுவது கிடையாது. 'தக்ஷ: சிறந்த திறமை உடையவன்' என்று கீதை கர்மயோகியை வர்ணிக்கின்றது. "ஈஸ்வர ஆராதனையாக, உன்னுடைய முழு ஆற்றலுடன் கர்மம் செய்து, பலனைப்பற்றிக் கருதாது பற்று நீங்கி இரு" என்பதே கர்மயோகத்தின் சாரம்.

**பக்தியோகம்**

கடவுளை அன்பின் சொரூபமாகக் காண்பதுவே பக்தியோகம். படைப்பு அனைத்தும் அன்பின் வெளிப்பாடே. இரண்டு ஜடப் பொருள்கள் இடையேயும் ஈர்ப்பு விசை உண்டு என்று விஞ்ஞானம் நிரூபிக்கின்றது. (Law of Attraction). தாய்ப் பறவை தன் குஞ்சுகளிடம் அன்பு வைக்கின்றது.விலங்குதன் குட்டிகளிடம் பாசம் வைக்கின்றது. பிரபஞ்சம் முழுவதும் அன்பு ஆட்சிசெலுத்துகின்றது.

**ஞானயோகம்**

அன்பும் ஆனந்தமும் ஒன்றே; ஆனந்தமும்,பரமனும் ஒன்றே. "ஆனந்தோ ப்ரம்மேதி வ்யஜானாத்." (தைத்திரிய உபநிஷதம்). 'ப்ரக்ஞானம் ப்ரஹ்ம' என்றவாறு 'ஆனந்தம் ப்ரஹ்ம' என்பதும்மஹா வாக்கியமே எனக் கொள்ளலாம். தன்னடக்கம் பழகி, தெய்வீக அருள் பெற்றவன் அறிவும் அன்பும் ஒன்றே என உணர்கிறான். அங்கிலையில் 'ஒரேமெய்ப்பொருள் பல விதத் தோற்றங்களில் திகழ்கின்றது' என்று தெளிவதே ஞானயோகமாகும்.

**ஹிந்து மதத்தின் தனிச் சிறப்பு அதிகாரி பேதம்**

மனப்பாங்கிற்கு ஏற்ப நான்கு நெறிகளில் எந்த ஒன்றையும் சாதகன் பின்பற்றலாம். அமீபா என்ற ஒரு புலனுள்ள உயிரினத்தில் துவங்கி பரமஹம்ச ஞானி வரையில் பரிணாம வளர்ச்சியில் பல நிலைகள் உள்ளன. ஒருவருக்குப் பொருந்துவது, அடுத்தவருக்குப் பொருந்தாது. எனவேதான் 'அதிகாரி பேதம்' என்ற முறையில் தனக்குத் தேவையானதை நிர்ணயிக்கும் சுதந்திரம் தரப்பட்டுள்ளது. இச்சிறப்பு ஹிந்து மதத்தின் தனித் தன்மையாகும்.

குறுகிய மனப்பாங்குடன் ஒரே மதம், ஒரே புத்தகம், ஒரே குரு, ஒரே வழிபாட்டு முறை— என்று கண்மூடித்தனமாக வலியுறுத்தி மனக் கசப்பை அதிகப்படுத்துவது நமது தர்மம் அன்று. சனாதன தர்மம் வலியுறுத்தும் யோக நெறிகளை ஆராயும்போதுதான் இதன் சிறப்பு விளங்கும். அமெரிக்காவில் சுவாமி விவேகானந்தரைப் பார்த்து, "எங்களை எல்லாம் ஹிந்துவாக மதம் மாற்ற வந்திருக்கின்றீர்களா?" என்று பலர் கேட்டனர். "நான் ஹிந்து மதத்தையோ, புத்த மதத்தையோ, ஜோராஸ்தர் மதத்தையோ போதிக்க வரவில்லை. என்னுடைய மதத்தைப் (My own ism) போதிக்கவே வந்துள்ளேன். அது யாது? மனிதனை மேலும் சிறப்பு உள்ளவனாக ஆக்குவது (to make man a better man)." என்று சுவாமிஜி பதில் உரைத்தார். வேதாந்த நெறிப்படி வாழ்வதால், ஒரு மாணவன் சிறந்த மாணவனாகவும், ஓர் ஆசிரியர் சிறந்தஆசிரியராகவும், ஒரு தொழிலாளி சிறந்த தொழிலாளியாகவும், ஒரு தச்சர் சிறந்த தச்சராகவும் முன்னேற்றமடைவர்.

இவ்விதம் சாதாரண மனிதனைத் தெய்வீக நிலைக்கு உயர்த்தும் மாற்றத்தை வேதாந்தம் தருகின்றது. வகுப்புவாதக் கொள்கைகளும், பிறர் கருத்தை ஏற்காத முரட்டுப் பிடிவாதமும் (Creeds and dogmas) இடம் பெறாததே சனாதனத்தின் சிறப்பாகும்.

# அறிவின் படித்தரங்கள்

[சிவத்தொண்டன்]

( 440 ஆம் பக்கத் தொடர்ச்சி )

**பகுத்தறிவு என்றால் என்ன?**

மனிதனைப் பகுத்தறிவு படைத்தவன் என்று சொல்வது உலக வழக்கு. பகுத்தறிவு என்றால் நித்தியம், அநித்தியம்; நல்லது, கெட்டது; பயனுள்ளது, பயனற்றது; உயர்ந்த நோக்கம், தாழ்ந்த எண்ணம்; உடலுணர்ச்சியின் உந்துதல், உள்ளுணர்வின் வெளிப்பாடு என்றெல்லாம் பகுத்துப் பார்ப்பது, அல்லது இனங்கண்டு பிரித்துப் பார்ப்பது என்று பொருள். Presence of mind என்று ஆங்கிலத்தில் சொல்வதுபோன்று, இடம், பொருள் ஏவலை அனுசரித்து நடந்துகொள்ளுதல் அனுபவ அறிவு. சூழ்நிலைக்கு நாம் அடிமையாகக் கூடாது. சூழ்நிலையை நாம் நம் வசப்படுத்த வேண்டும். சான்றாக, தம்மை வளர்த்தவன் இறந்துபோனால், பாசத்தினால் உந்தப்பட்டு ஐந்தறிவுடைய பிராணிகள் ஏங்கி அலையும்; உயிரையும் விட்டுவிடநேரிடலாம். ஆனால் ஆறறிவு படைத்த மனிதனே 'இன்று உன் முறை, நாளை என் முறை' என்பதை அறிந்து மனத்தைத் தேற்றிக்கொண்டு அன்றாடச் செயல்களில் ஈடுபடுவான்.

**பகுத்தறிவு உருவாகும் விதம்**

நுண்ணறிவும், நூலறிவும் நம் அந்தராத்மாவைப் பக்குவப்படுத்தும். அனுபவ அறிவும், தொழில் அறிவும் நம் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும். சமூக அறிவு அதிகரிக்கின்ற அளவு, சமூகம் ஒருவனை மதிக்கவும், அவனுக்குக் கட்டுப்படவும் செய்கிறது. விஞ்ஞான அறிவு வசதிகளைப் பெருக்கும். ஆன்மீக அறிவோ நம் உள்ளத்தில் உறையும் உலகளந்தானையே உணரச் செய்யும். இதுவே பகுத்தறிவின் முடிந்த நிலையாகும். அந்நிலையில் மெய்ஞானம் சித்திக்கும். அந்த அறிவு பிறவிப் பிணியை வேரறுக்கும். முதலில் கல்வியறிவும், உலகியல் அறிவும் நமக்குத் தேவை. வாழ்க்கையைச் செவ்வனே நடத்தத் தெரியாதவனுக்கு ஆன்மீகம் வாய்க்காது. அதேநேரத்தில் மறுபடியும் பிறவி என்பதே இல்லாமற் செய்வதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். ஆன்மீக நெறியே இதற்கு உற்ற உபாயம் ஆகும்.

**அறிவின் அவசியம்**

மனிதன் எங்கும் தனித்து வசிக்க இயலாது. குடும்பம், பள்ளி, அலுவலகம், கடைவீதி என்று எங்குச் சென்றாலும் குழுக்கள் அல்லது கூட்டங்களில்தாம் அவன் இயங்க வேண்டும். அவ்விதமிருக்க நம்மில் பெரும்பாலோர் தங்கள் ஓய்வு நேரத்தைப் பயன்தராத பல அற்பக் காரியங்களில் செலவழித்து விட்டு ஆயுள் முழுவதும் சமூகத்தின் அடிமட்டத்திலேயே உழன்று கொண்டிருப்பார்கள். தாம் செய்த வினைக்கு விதி என்றும், இறைவன் திருவுள்ளம் என்றும், இயற்கையின் நியதி என்றும், சமூகத்தின் ஊழல் என்றும் பல்வேறு பொய்க் காரணங்களைக் கூறித் தமது பரிதாபகரமான நிலைக்கு ஆறுதல் தேடிக்கொள்ள முயல்வார்கள். உண்மையில் மனிதன் வாழ்க்கையில் முன்னேறுவதும், வீழ்ச்சியடைவதும் அவனுடைய அறிவின் அளவைப் பொறுத்தே அமையும். தன்னிடம் இருக்கும் நேரம், பொருள், உடற்சக்தி, சுற்றுச் சூழல் ஆகியவற்றை நன்கு பயன்படுத்தித் த்னது பொது அறிவையும் (general knowledge) நுண்ணறிவையும் (scientific thinking) அனுபவ ஞானத்தையும் (experience) நாள்தோறும் வளர்ப்பவனே வாழ்க்கையில் முன்னேறி மேல் நிலைக்கு வருவான். 'வல்லவன் வாழ்வான்' என்றும் 'வாயுள்ள பிள்ளை பிழைக்கும்' என்றும் நம் பெரியோர்கள் சுருக்கமாகச் சொன்னது இதைத்தான். எனவே நமது அறிவை வளர்த்துக் கொள்ளும் வழிமுறைகள் சிலவற்றை இனிக் காண்போம்.

**உலகியல் அறிவை வளர்க்கும் வழிமுறைகள்**

அறிவை வளர்ப்பதற்கு முதற்படி, தான் சொல்லுவது கடுகளவும், கேட்டுத் தெளிவது மலையளவுமாக இருப்பதுதான். பிறரிடம் காணப்படும் நல்லியல்புகள், நல்ல திறமைகள் ஆகியவற்றை ஊன்றிக் கவனிக்கவும், பின்பற்றவும் பழகவேண்டும். நம்முடைய பணத்

தைப் பறிக்கும் புத்தகங்களைப் படிக்காமல், நமது பண்பையும், தகுதிகளையும் வளர்க்கும் புத்தகங்களையே படிக்க வேண்டும். யார் எதைச் சொன்னாலும் நடுநிலையில் நின்று ஆராய்ந்து உலகத்துக்கு நன்மை தருவதையே நாம் தேர்ந்தெடுக்க வேண்டும்; ஒப்புக்கொள்ள வேண்டும். சுயநலவாதிகள் அப்பொழுது நம்மை எதிர்த்து நின்று இடையூறுகளை உண்டாக்கினால் தளர்ந்து போகக்கூடாது. துணிவு இல்லாதவன் செத்த பிணம் என்று உறுதி படைத்திருக்க வேண்டும். 'இன்றைக்குக் கட்டடக்கலை பற்றிய நுணுக்கங்களைத் தெரிந்து கொண்டேன். நாளை கடற் பயணத்தைப் பற்றிய சகல விவரங்களையும் அறிவேன்' என்பது போலத் திட்டம் போட்டு வேலை செய்ய வேண்டும். சமூகத்தில் நல்ல நிலையில் உள்ளவர்களோடு இணக்கம் வைத்து நன்கு பழக வேண்டும். வீண் அரட்டைகளில் பொழுது போக்கக்கூடாது. அடங்காத லட்சிய வெறி உள்ளத்தில் கனன்றுகொண்டே இருக்க வேண்டும். அற்பப் போகங்களில் நம் மனமோ, மற்றவர்களோ நம்மைத் திசை திருப்பினால் ஏமாந்து போய் நம்மிடம் இருக்கும் 'எதிர் காலம்' என்ற அற்புதமான களஞ்சியத்தைப் பறிகொடுத்துவிடக் கூடாது. ஏனெனில் ஒரு முறை இழந்துவிட்டால் மீண்டும் அதைத் திரும்பப்பெற முடியாது. ஆங்கிலத்தில் வெளி வரும் பல அற்புதமான மாத இதழ்களைத் தொடர்ந்து படிக்கவேண்டும். எதிர் நீச்சல் போடாதவன் என்றைக்கும் உருப்படான். ஆகவே வசதிக் குறைவுகளை எண்ணிப் புலம்பிக் கொண்டிராமல், ஒன்றன்பின் ஒன்றாக நம் திட்டங்களை முடித்துக்கொண்டே போக வேண்டும். ஏட்டுக் கல்வியையே நம்பிக் கொண்டிராமல் பள்ளிப் பருவத்திலிருந்தே இரண்டு மூன்று தொழில்களில் கவனம் செலுத்தி அடிப்படை அறிவைப் பெறவேண்டும். மூளைக்கு வேலை கொடுப்பவனுக்கே முனைப்பான வாழ்க்கை வந்து அமையும். ஆகையால் விடுகதைகள், புதிர்கள் என்று ஆரம்பித்துப் பிறகு கடினமான பிரச்னைகளுக்கு நியாயமான முடிவினைக் கண்டறிவது வரை படிப்படியாக நம் மூளைக்குப் பயிற்சி தரவேண்டும். தேர்ந்தெடுத்துவிட்ட தொழிலில் தன்சக்தி அத்தனையையும் ஈடுபடுத்தி, மேலும், மேலும் அதில் தன் திறமைகளை வளர்த்துக் கொண்டு(பிறரைத் திருப்திப் படுத்துவதற்காக வேலை செய்யாமல்) தன் ஆத்ம திருப்தி ஒன்றே குறியாக உழைப்பவன் தோற்றதாக இது வரை எங்கும் ஏற்பட்டதில்லை. இவையே உலக வாழ்க்கையில் வெற்றி பெறும் வழிமுறைகள் ஆகும்.

**ஆன்மீக அறிவு**

பக்திப்பாடல்களையும், தோத்திரங்களையும் இசையோடும், உருக்கத்தோடும் பாடத் தெரிந்துகொள்வது முதற்படி. இறைவனுக்கு அபிஷேகம், அர்ச்சனை, தியானம், நிவேதனம், ஆராதனை முதலிய வழிபாட்டு முறைகளைச் சரிவரத் தெரிந்து கையாளுதலும், காயத்ரீ சொல்லுதலும், அனுஷ்டானங்களைக் கடைப்பிடிப்பதும் அடுத்த படி. நாளும் கடைப் பிடிக்க வேண்டும் நாமஜபம். பிறகு வாரந் தோறும் திருக்கோவிலில் அமைதியான வழி பாடுசெய்தல்முக்கியம்.படாடோபமான உடைகளும், மதச் சின்னங்களான வெளி அடையாளங்களும், பகட்டான அலங்காரங்களும், ஆரவாரமான ஏற்பாடுகளும் பக்தி நெறியின் எதிரிகளாம் பக்தி முதிர முதிரப் பக்தன் பூக்களாலும், பாக்களாலுமே தன் தெய்வத்தை அழகுபடுத்துவான். அவன் அன்பினால் விடுகின்ற கண்ணீரே புனிதமான கங்காபிஷேகமாகும். அறவோர் எழுதிய தெய்வீக நூல்களை அவன் கடமைக்காக வாசிக்காமல் பொருள் உணர்ந்து, சொல் அறிந்து, உள்ளத்தால் அனுபவித்து ஓதுவான். தனக்கென ஒன்றும் கேளாது உலக நலத்தையே வேண்டுவான். இறைவன் திருநாமத்தை ஒவ்வொரு கணமும் அவன் உள் மனம் ஜபித்துக் கொண்டே இருக்கும். ஓய்வு நாட்களில் புண்ணியத் தலங்களுக்குத் தீர்த்த யாத்திரை செல்வான். ஆன்றோர்களின் சொற்பொழிவுகளைக் கவனித்துக் கேட்டு உபயோகமுள்ள கருத்துக்களைத் தானும் செயல்படுத்துவான். தன் வாழ்க்கையை இறைவனுக்கு ஒப்புக் கொடுத்துத் தன் செயலிலும், சொல்லிலும், எண்ணத்திலும் தூய்மையைக் கடைப்பிடிப்பான். 'மன்னுயிர்க்குச் செய்வதே மகேசனுக்குத் தொண்டு' என்றவாறு ஒழுகுவான்.

# கொல்லிமலையில் வழிபாடு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 25-11-1983 அன்று நடைபெற்ற கொல்லிமலை வழிபாட்டில் ஆற்றிய அருளுரை)

கல்வித்துறையை நாம் எடுத்துக்கொண்டது பெரிய விஷயம். அதைப்பற்றித் தீவிரமாக ஆராய்ச்சி பண்ணுவதற்கு நேரம் கிடையாது. ஆயினும் சுருக்கமாக விஷயத்தை ஆராய்வது அவசியமாகின்றது. கல்லூரி நடத்தவேண்டுமென்றால் லக்ஷக்கணக்காகச் செலவு செய்ய வேண்டும். செலவு பண்ணிக் கல்லூரியைக் கட்டி முடித்தாலும் இவ்விடத்திற்கு மாணவர்கள் வரமாட்டார்கள். காரணம் என்ன? அவர்களுக்குப் பாடங்கள் முடிந்த பிறகு நேரத்தைப் போக்குவதற்கு ஏற்ற வசதி இங்குக் கிடையாது. இயற்கை அழகு பொருந்தியதாய் இருக்கலாம். நவீனக் கல்வி கற்கின்ற மாணவர்களுக்கு ஏற்ற இடம் இது அன்று. அவர்கள் இந்தச் சூழ்நிலையை விரும்பி வருவார்கள் என்பதை நாம் மறந்து விடவேண்டும். அத்தகையவர்களால் நாட்டுக்கு ஒரு உய்வும் ஏற்படப்போவது இல்லை.

இது பழைய கோயில். கோயில் ஏன் அழியாது இருக்கின்றது? தவசிகள் புரிந்த தவத்தின் விளைவாக அது அழியாதிருக்கிறது. கோடிக்கணக்கானபேர் மதம் மாறலாம். அதை ஈடுகட்ட நாலு தபசிகள் இருந்தால் போதுமானது. தபசிகளின் மகிமை தவவலிமையில் இருக்கிறது. அதை ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பழங்கால முனிவர்கள் செய்த தவத்தை நாம் புதுப்பிக்கவேண்டும்.

பள்ளிக்கூடத்தைப் பொறுத்தவரை இங்கு ஒன்று அவசியந்தான். அது வெறும் பள்ளிக்கூடமாக ஐந்தாவதுவரை மட்டும் இருந்தால் போதுமானது. உள்ளூர்ப் பிள்ளைகள்படிக்கவும் செய்வார்கள், பூமியில் வேலையும் செய்வார்கள். அவர்கள் நல்ல குடிமக்களாக இங்கு வாழ்ந்திருப்பார்கள். அந்த அளவில் பள்ளிக்கூடப் பொறுப்பை வசதி அமையுமிடத்து நாங்கள் ஏற்றுக்கொள்கின்றோம். அதற்கு மேல் பள்ளிக்கூடம் தேவையில்லை.

வட இந்தியாவில் சாதுக்கள் தங்கித் தவம் செய்வதற்கு இடம் செய்து தருகின்றார்கள். பசிப்பிணி மருத்துவர் இந்தக் கருத்தில் கவனம் செலுத்தித் தபஸ் பண்ணுகின்றவர்களுக்கு இரண்டு வேளை உணவு கொடுத்தால் இங்கிருந்து தபஸ் பண்ணுவார்கள். இந்த வட இந்தியாவின்புதிய முறையை இங்குப் புதுப்பிப்பது அவசியமாகின்றது. பிறகு அன்பர்களும் தாய்மார்களும் இடை இடையே இங்கு வந்து அந்தர்யோகம் நடத்துவார்கள். அதன்மூலம் அருள்துறை ஓங்குகின்றது. அருள்துறை ஓங்க ஓங்க வலிவு தானே வந்து அமைகின்றது.

நம் மதம் அழிந்துபோய்விடும் என்று பலபேர்கள் எண்ணுகின்றார்கள். நம் மதம் ஒரு நாளும் அழிந்துபட்டுப்போகாது. நம் மதம் அழிந்தால் உலகத்தின் நாகரிகமே அழிந்து பட்டுப்போகும். நூற்றுக்கணக்கான பேர்களை ஆடு மாடுகளை விலைக்கு வாங்குவதுபோன்று பணம் கொடுத்து மதமாற்றம் செய்கின்றார்கள். அமெரிக்காவில் உள்ள அறிஞர்கள் 'இந்துமதத்திற்கு நிகரானது ஒன்றுமில்லை' என்று தாங்களாகவே வந்து சேருகின்றார்கள்.

ஒரு இஸ்லாமியப் பெரியவர் சில மாதங்களுக்கு முன்பு இந்துவாக மதம் மாறிவிட்டார். 'குரானில் சொல்வதெல்லாம் காட்டுமிராண்டித்தனம், சரியான முறை இந்துமதத்தில்தான் இருக்கிறது' என்று சொன்னார். மொட்டை அடித்துக்கொண்டு குல்லாப்போட்டுக்கொண்டு நூற்றுக்கணக்கான ஏழைமக்கள் செல்லலாம். ஓர் அறிஞன் நம் இந்துமதத்திற்கு வருவானேயாகில் அது இந்துமதத்திற்கு அஸ்திவாரமாய் வந்து அமைகின்றது. இப்பொழுதுள்ள கிளர்ச்சிகள் தாற்காலிகமானவை. எண்ணிக்கையை அதிகப்படுத்துவது, சமயம் மாற்றுவது, விலைகொடுத்து வாங்குவது போன்றவை அல்ல நம் சமயம். பண்பாட்டை ஆராய்ந்து பார்க்குமிடத்து, நாம் பிரச்சாரம் செய்யாமலேயே அறிஞர் பெருமக்கள் இந்து மதத்தை ஏற்றுக்கொள்ளும் அறிகுறிகள் உலகமெங்கும் தென்படுகின்றன.

இன்றைக்கு நம்முடைய கடமை என்ன? ஆழ்ந்து பக்தியிலும், ஞானத்திலும், சீலத்திலும் ஈடுபடவேண்டும். அதற்கேற்ற முறை

யில் இங்குச் செயல்கள் நிகழவேண்டும். இந்தக் கோயில் பணி முடிந்தான பிறகு அன்பர்கள் இடையிடையே கூடித் தியானம் செய்வது, பஜனை பண்ணுவது, சத் விஷயங் களை ஆராய்ச்சி பண்ணுவது தீவிரமாக நடை பெறும். இங்குள்ள குழந்தைகளுக்கு வாழ்க் கைக்கு ஏற்ற நல்ல பயிற்சி தரும் பொறுப்பை நாங்கள் ஏற்றுக்கொள்கின்றோம். அதற்கு மேல் இங்குத் தேவை ஒன்றுமில்லை. மேற் கொண்டுஅப்போதைக்கு அப்போது ஆராய்ச்சி பண்ணலாம். எதிர்காலத்தில் நடைபெறு வதையெல்லாம் இப்போதே திட்டம் போட்டுச் சொல்லமுடியாது. நல்ல இயக்கத்தைத் துவங்க வேண்டியது முதல் வேலை. துவங்கியான பிறகு மேலே வரவர ஆராய்ச்சி பண்ணிக்கொள்ள லாம். 'இவையெல்லாம் நடைபெறவேண்டும்' என்று எண்ணத்தில் இருக்கலாம். நடை முறையில் படிப்படியாகப் போகலாம். அது போதுமானது. திருவருள் சம்மதத்தால் எல் லாம் மங்களமாய் முடியும்.

இந்துமதம் எதிர்காலத்திலே உலகம் முழு வதும் சான்றோர்களுக்கிடையில் அமையப் போகின்றது என்பது வெளிப்படை. ஏனென் றால், மதம் என்பது மனிதனைப் பண்படுத்து வதற்கான முறை. அந்த முறை இந்து மதத் தில் இருப்பதுபோன்று உலகத்தில் வேறு எந்த மதத்திலும் இல்லை. கொஞ்ச காலத் திற்குப் பிறகு இந்தியா இஸ்லாமிய நாடாக ஆகப்போகிறது என்பது எல்லாம் வெறும் கட்டுக்கதை. அதை எல்லாம் கருத்தில் வாங் கிக்கொள்ள வேண்டியதில்லை.

ஆழ்ந்த அஸ்திவாரத்தில் நம்நாட்டில் பண் பாட்டிற்குத்தான் முக்கிய ஸ்தானம் தந்திருக் கின்றோம். அமைதியாக நாம் பண்பாடு அடைந்து வருவோம். இதன்மூலம் அரிய பெரிய செயல்கள் எல்லாம் நிகழப் போகின் றன. ஆரவாரத்தைக் குறித்து மயங்கவும் வேண்டியதில்லை; கவலைப்படவும் வேண்டிய தில்லை. திருவருளை முன்னிட்டுச் சாந்த மூர்த்தி களாய் இருந்து நம் வழியில் நாம் தீவிரமாக ஈடுபடுவோம். எல்லா நலன்களும் உலகம் முழுவதற்கும் வந்து அமையும். அது இந்து மதத்திற்குத்தான் சாத்தியம். ஏனென்றால் சனாதன தர்மத்தில் எல்லாம் அடங்கியிருப்ப தனால் அதற்கு நிகரான மதம் இல்லவேயில்லை. நலத்தை விட்டுக் கீழ்நிலை அடைவதற்கு இறை வன் இடம் தரமாட்டார். ஆகவே எடுத்துக் கொண்ட காரியங்களை அமைதியாகப் பூர்த்தி பண்ணி நிர்மாணத் திட்டத்தில் மேலும்மேலும் ஈடுபடுவோம். இறைவன் திருவருளால் எல் லாம் மங்களமாய் முடியும். சந்தேகம் வேண் டாம். படிப்படியாக மேல்நிலைக்கு வருவோம்.

---

# குறிப்புகள்

### நீலகிரியில் பக்தி வெள்ளம்

பனி படர்ந்த சிகரங்கள், அவற்றின் முடி தவழ்ந்த வெண்மேகத் திரள்கள், உயர்ந் தோங்கி விண்ணை நோக்கும் விருட்சங்கள், அடர்ந்து செழித்த தேயிலைத் தோட்டங்கள், ஆங்காங்கே பல்வகை வண்ணங்களில் மிளிர்ந்து கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் மலர்ச்சோலைகள், உடலுக்கு இதம் தரும் குளிர்ந்த காற்று, கனவுலகம் போல் எங் கும் அமைதியும், சுத்தமும் நிலவுகின்ற சூழ் நிலை—இவை அனைத்தும் நீலகிரியில் நாம் எங் குச் சென்றாலும் காணும் காட்சிகள் ஆகும். அவ் விதமிருக்கப் பக்திப் பயிர் இங்குச் செழித்து வளர்வதில் வியப்பேதுமில்லை. ஐம்பது ஆண்டு களுக்கு முன்பு இங்குள்ள ஊர்களில் ஸ்ரீ ராம கிருஷ்ண இயக்கத்துக்கு ஆன்றோரால் விதை யூன்றப்பட்டது. கீதை, திருவாசக வகுப்புக் களும், பஜனை, பிரார்த்தனை ஆகிய வழிபாடு களும் வாரந்தோறும் தவறாது நடாத்தப்பெற் றன. இன்றளவும் இவ்வுயர்ந்த வழிமுறைகளை நீலகிரி வாழ்மக்கள் பின்பற்றி வருகிறார்கள்.

சென்ற சித்திரை மாதத்தில் ஸ்ரீமத் நித்தி யானந்த சுவாமிகளின் தலைமையில் அன்பர்கள் இப்பகுதியில் பாதயாத்திரை சென்றார்கள். அதைத் தொடர்ந்து இரண்டு வருடங்களாக மழையின்றி வறண்டு கிடந்த சரிவுகளில் கன

மழை பொழிந்தது. மக்களும் பயிர்களைப் போலவே உள்ளம் குளிர்ந்தார்கள். சென்ற ஐப்பசி மாதத்தில் தங்கள் ஊர்களுக்கும் சுவாமிகள் வரவேண்டும் என்று பல அன்பர்கள் வற்புறுத்தவே இந்த இரண்டாம் நீலகிரி விஜயம் நிகழ்வதாயிற்று.

முதல் நாள் உதகையில் நிகழ்ந்த ஹிந்து எழுச்சி ஒற்றுமை மகாநாட்டில் உரையாற்றினார். சுவாமி விவேகானந்தரின் அடிச்சுவட்டில் அவர் கல்வி வளர்ச்சியைக் குறித்துக் கண்ட கனவு நனவாகி வருவதை விவரித்தார். சிறு வயதில் நாட்டின் வறுமை, அறியாமை முதலிய கொடுமைகளை எதிர்த்துப் போரிட முனைந்தபோது, மனமுவந்து அவரை நாட்டுக்குத் தத்தம் செய்தார் அன்னை புவனேசுவரி. அவருடைய தந்தை விசுவநாததத்தரும் சாகும் தறுவாயில் "மகனே, நான் நிறையச் சம்பாதித்தேன். ஆனால் உனக்கு விட்டுப் போகும் சொத்து ஒன்றே ஒன்றுதான். அதை நிலைக் கண்ணாடியில் நீயே பார்த்துக்கொள்" என்று மிகப்பெரிய தத்துவத்தை எளிதில் புலப்படுத்தினார். அவ்விதமே ஸ்ரீ ராமகிருஷ்ணரும், விவேகானந்தர் முக்தியை யாசித்தபொழுது "குழந்தாய், உனக்கு மட்டும் முக்தியைத் தேடும் சுயநலக்காரனாக நீ இருக்கக்கூடாது. கடல் கடந்து நெடுந்தொலை செல்கின்ற கப்பலைப்போன்று நீ மானிடர் பிறவிப் பெருங்கடலைக் கடக்க உதவியாய் இருக்க வேண்டும்" என்று அருளினார். இத்தகைய சான்றோர்களின் துணையுடன் இனி ஆங்கிலேயன் வகுத்த அடிமைக்கல்வி முறையை ஒழித்து இறையுணர்ச்சியும், நாட்டுப்பற்றும், சேவையில் நாட்டமும், ஒழுக்கத்தில் உறுதியும், உழைப்பில் நம்பிக்கையும்கொண்டு முன்னேறுகின்ற இளைஞர்களையும், யுவதிகளையும் அதிக அளவில் உருவாக்குதலே நமது கடமையாகும்.

பின்னர் கூனூர், கோடப்பமந்து, எடக்காடு, அன்னவயல், மஞ்சக்கம்பை, ஒசட்டி, அதிகரட்டி, முட்டிநாடு, கோடேரி, கோத்தகிரி ஆகிய ஊர்களுக்கும் விஜயம் மேற்கொள்ளப்பட்டது. இவ் எல்லா ஊர்களிலும் கோயில்கள் சிறியனவாக இருப்பினும் மிகவும் தூய்மையுடன் காணப்பட்டன. மக்கள் பக்தி சிரத்தையுடன் இறைவனை வழிபட்டார்கள். வயது வித்தியாசம் பாராமல் ஆண்கள், பெண்கள் அனைவரும் நாமாவளியிலும், பஜனைகளிலும் கலந்துகொண்டனர். சின்னஞ்சிறு குழந்தைகளும் இயற்கையாகக் கைத்தாளமிட்டுத் திருநாமங்களை ஓதிய காட்சி பரவசமூட்டக் கூடியதாயிருந்தது. ஊர் மக்கள் அனைவரும் ஒருங்கு திரண்டு மழையையும் பொருட்படுத்தாமல் நெடுநேரம் காத்திருந்து பயணக் குழுவினரை அகமும் முகமும் மலர வரவேற்றார்கள். சொற்பொழிவுகளை அமைதியும், ஆர்வமும் மிளிர உன்னிப்பாகக் கேட்டு உவந்தனர். விருந்தினரைப் போட்டி போட்டுக்கொண்டு தாங்கள் செய்த அன்பு உபசரிப்புக்களால் திணற அடித்தார்கள். எளிமையும், அன்பும், இனிமையும் பொங்கி வழிந்த இவ்வியற்கைச் சூழலைப் பிரிவதற்கு எவருக்குமே மனம் வராது.

எடக்காடு முதலிய கோயில்களில் பரமஹம்சர், அன்னையார், விவேகானந்தர் ஆகியவர்களின் திருவுருவப்படங்களை மூலத்தானத்தில் வைத்துப் பூஜிக்கின்றனர். அதிகரட்டியில் 1937ஆம் ஆண்டு ஆன்றோரால் தொடங்கப் பெற்ற கலைமகள் சேவா சங்கம் நாளும் வளர்ந்து நற்பணி புரிந்து வருகிறது. அச்சங்கத்தின் புதிய கட்டடத்திற்குக் கால்கோள் விழாவும் நவம்பர் மாதம் முதல் தேதியன்று செவ்வனே நிகழ்ந்தது. கோத்தகிரி சாந்தி ஆஸ்ரமத்தில் ஆசிரியைகளுக்குக் கூறப்பட்ட அறவுரையில் தவம்புரிதற்கு நிகரான இச்சாதனத்தில் மாணவமணிகளிடம் எளிய பழக்க வழக்கங்கள், தூயவாழ்வு, உடல் திட்பம், மன ஒருமைப்பாடு ஆகியனவற்றை நடைமுறைப் படுத்தும் வழிமுறைகள் விளக்கப்பட்டன. சிறு குழந்தைகளுக்கு விளையாட்டுப் போக்கிலேயே அறிவையும், அன்பையும் புகட்டவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது.

**திருச்செந்தூர் கந்தர் சஷ்டித் திருவிழா**

கந்தர் சஷ்டியை முன்னிட்டுத் திருச்செந்தூரில் காலையில் ஒருமணி நேரமும், மாலையில் ஒரு மணி நேரமும் சஷ்டிவிழா ஆறுநாட்களும் நாமஜபம் நிகழ்த்தப்பெற்றது. பெருந்திரளாய்க்கூடிய பக்தர்களுக்கு இது புதுமையான விருந்தாக அமைந்தது. முருகப்பெருமான் திருவுருவப்படம் ஒன்றை வைத்து மலர்

களால் அர்ச்சித்து 'ஓம் சரவணபவாய நம:' என்ற ஷடாட்சர மந்திரம் தொடர்ந்து ஓதப் பெற்றது. பொதுமக்களும் கந்தவேளின் திரு நாமத்தை உற்சாகத்துடன் இடைவிடாது உரக் கச் சொல்லி மகிழ்ந்தார்கள். நாம ஜபத்தினல் உரு ஏறத் திரு ஏறும் என்பதனை அன்று அனு பவபூர்வமாய் உணர்ந்தார்கள். நாள்தோறும் பல்வேறு தலைப்புக்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டன. ஆடம்பரமும், ஆரவாரமும், நெருக்கடியும் மிகுந்து அலங்கோலப்படுத்தும் நமது கோயில் திருவிழாக்களில் இதுபோன்று அமைதியும், பண்பும், ஆன்ம நேயமும் கம்பீர மாய்த் துலங்க இறைவனுக்கு ஆத்மார்த்த மான பூஜைகள் நடைபெறுதல் மிகவும் அவ சியமாகும். சமயமும், சமூகமும் இத்தகைய முன்னேற்றப் பாதையில் முனைந்து செல்ல சிவ குமாரன் திருவருள்புரிதல் வேண்டும். செந்தி லம்பதியான், ஷண்முகநாதன், ஜெயந்திநாதன் ஆகிய மூர்த்திகளின் தரிசனமும், தங்கரத பவனியும், சூரசம்ஹாரமும், பிறகு திருக்கல் யாண உற்சவமும் முழுமையாய்க் கண் டுணர்ந்து விவரித்தற்கு மூவரில் ஒருவரான பிரம்மதேவர்தாம் முழுத்தகுதி பெற்றவர். ஆனல் இவை வெறும் புறக்காட்சிகளே. அகக் கண்ணில் இவற்றை உய்த்துணர்ந்தவர்களே உண்மை தரிசனம் பெற்றவர்களாவார்கள்.

**திருவண்ணுமலையில் தீப தரிசனம்**

ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய பஞ்ச பூதங்களையும் சிவசொரூபங்களாக வைத்து வழிபடுவது தொன்று தொட்டு நிகழ்ந்து வருகிறது. சிதம்பரத்தில் ஆகாசலிங் கம், காளஹஸ்தியில் வாயுலிங்கம், திருவண்ணு மலையில் தேயுலிங்கம், திருவானைக்காவில் அப்புலிங்கம், காஞ்சிபுரத்தில் பிருதுவிலிங்கம் என ஐம் பூதங்களும் ஐந்து இடங்களில் எம் பெருமானின் வடிவத்தில் தொழப் பெறுகின் றன. இவ்வியற்கையைக் கடந்து அப்பால் நிற் பவர் ஈசனர். கடவுள் என்ற சொல்லுக்கே அனைத்தையும் கடந்தவர் என்பதுதானே பொருள்! அருவுருவான இறைவனை நம் கண் ணுக்குப் புலப்படும் இயற்கைப் பொருள் ஒன் றில் உய்த்துணர்வது நமது மரபு. திருவண்ணு மலையில் அருணுசலமே (மலையே) தெய்வத் தின் உருவமாகத் திகழ்கிறது. கார்த்திகைப் பௌர்ணமியன்று இச்சிகரத்தின் முடியில் பெருந்தீபம் ஏற்றி ஒளிவழிபாடு நிகழ்த்தப் பெறுகிறது.

இவ்வாண்டு நவம்பர் 20ஆம் தேதி அதிகாலை திருக்கோவிலில் பரணி தீபதரிசனம் நிகழ்ந் தது. அன்று பொழுது புலரும் முன்னரே பக்தர்கள் கூட்டம் கிரி வலம் வரலாயிற்று. மலை அடிவாரத்தைச் சுற்றிவரச் சுமார் பத்து மைல் ஆகும். தபோவனத்துத் துறவியர்களும் அன்பர்களும் சுமார் நூற்றைம்பதுபேர் கம்பத்தடி இளையனர் சந்நிதி முன்பு நின்று காலை 5-45 மணிக்கு "சிவாய நம ஓம் சிவாய நம: சிவாய நம ஓம் நமச்சிவாய" என்ற திருவைந்தெழுத்தை ஓதிக் கிரிப்பிரதட்சிணத் தைத் துவக்கினர். செல்லும் வழியில் பெரு வாரியான பக்தர்களும் கலந்துகொண்டு நாம உச்சாரணையை இடைவிடாது தொடர்ந்தனர். ரமணுச்ரமத்தில் தீபாராதனையைமுடித்துக் கிரி வலத்தைத் தொடர்ந்தபோது வழியில் கண்ட ஒரு காட்சி உள்ளத்தைத் தொடுவதாக இருந் தது. பக்தி சிரத்தை, மாத்ரு பக்தி இரண் டுக்கும் ஒரு முன்னுதாரணமாய் அக்காட்சி அமைந்தது. வயது முதிர்ந்த ஓர் அம்மை யாரை வாலிபரான அவருடைய மைந்தர் மிகவும் பொறுமையுடன் வழி நடத்தி வந்தார். கையில் கோலும், நாவில் நாமமும், சிந்தையில் சிவ உணர்வும் துலங்க அந்த அம்மையார் வெளி உலக நினைவே அற்றவ ராய்ப் பைய நடந்து சென்றார். இளைஞர் நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை, எடுப்பான உருவம், துடிப்பான கண்கள் தம்மை அணிசெய்ய மிகவும் பவ்வியமாக அம் மாது சிரோமணியை மெதுவாக அழைத்துச் சென்றார். அவரும் தம் சுற்றுச் சூழலை மறந்து தாம் கொண்ட கருமமே கண்ணுயினர். தம் உடல் வளத்தையும் செல்வவளத்தையும் பறை சாற்றிக்கொண்டு பலரும் பலவகை வாகனங் களில் மிடுக்காக அவர்களைக் கடந்து சென்ற னர். காரைக்கால் அம்மையார் மெய் வருந்தத் தலையால் நடந்து கயிலைக்குச் சென்ற காட்சி அங்கு நிதர்சனமாகியது. இங்கோ சுற்றிலும் பலரும் பொருளுக்காகப் புலம்பிக்கொண்டிருந் தனர். பரமஹம்சர் "சுகபோகங்களுக்காக உலக மக்கள் உடலை வருத்தி உழைக்கின்றார்கள்.

இறைவா, உன்னைக் காணவேண்டுமென்று ஒரு சொட்டுக் கண்ணீராவது சிந்துகிறார்களா?" என்று உருகிய காட்சியும் அக்கணத்தில் தோன்றி மறைந்தது.

பாதிதூரம் சென்றதும் பழைய அண்ணாமலைக் கோயிலை அடைந்தோம். அங்கிருந்து "ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம் சக்தி ஓம்; ஆதி சக்தி, மஹாசக்தி, பராசக்தி ஓம்" என்று சக்தி மந்திரத்தை ஜபித்துக்கொண்டு கிரிவலத்தைத் தொடர்ந்தோம். காலை ஒன்பதே கால் மணிக்கு ஒரு வயல் வெளியில் அன்பர்கள் அமர்ந்தனர். அங்கு ஒரு மணி நேரம் அந்தர்யோக முறையில் பஜனை, தியானம், சொற்பொழிவு, அர்ச்சனை முதலியன நடந்தேறின. அவ்வூர் அன்பர்கள் பழமும், சுக்குக்காப்பியும் அனைவருக்கும் கொடுத்தனர். மீண்டும் கிரிவலம் நாம உச்சாரணையுடன் தொடர்ந்தது. பகல் பதினொன்றரை மணிக்குக் கம்பத்தடி முருகப் பெருமான் சந்நிதியைத் திருவைந்தெழுத்தை ஓதிக் கொண்டே சென்று அடைந்ததும் கிரிவலம் மங்களமாய் நிறைவேறியது.

முதல் நாள் மாலை மூன்று மணியிலிருந்து நிகழ்ந்த பேரவையில் அமைதியான வழிபாட்டு முறைகள் பற்றியும், அருளாளர்களுடைய தூய சொற்களின் மகிமை பற்றியும், கூட்டு வழிபாட்டின் மகத்துவம்பற்றியும்,நன்றுடையானைத் தீயதொன்றில்லானை வழுத்தும் முறைகள்பற்றியும் எடுத்தியம்பப்பட்டன. மறுநாள்மதியம் சேலம் சாரதா சமிதியைச் சேர்ந்த துறவிகள் மெய்யுருக மனமுருகப் பக்திப்பாடல்களையும், பஜனைக் கீதங்களையும் பாடினர்.

பிறகு சரியாக மாலை ஆறு மணிக்குப் பஞ்ச மூர்த்திகள் தரிசனத்தையும், கோயில் முன்றிலில் ஏற்றிய பெருந் தீபதரிசனத்தையும், மலையின் மேல் ஏற்றிய மஹாதீப தரிசனத்தையும், வீடுகள் தோறும் ஏற்றிய கார்த்திகை தீப தரிசனத்தையும், கோயிலில் நிகழ்த்திய வாண வேடிக்கையின் ஒளிப்பெருக்கு தரிசனத்தையும் பெற்ற மக்கள் யாவரும் தம்மை மறந்து பரவச நிலையெய்தி 'சும்மா இருக்கின்ற சுகத்தினைப்' பெற்றனர். அவர்களுடைய தூய உள்ளங்களில் அலை பாய்ந்த பக்திப் பிரவாகமானது எங்கும் பரவி அருள் ஒளியைப் பாய்ச்சியது. கம்பீரமாய் நின்ற அருணாசலம், அதன் உச்சியில் சிவனார் தம் கரத்தில் ஏந்திய வெஞ்சுடரை நிகர்த்த தீபம், அதன் பக்கலில் வெண் முகில்கள் ஒன்றிரண்டு தழுவி நின்ற தண்ணார் அமுத முழுமதி இவையெல்லாம் அன்று கைலைக் காட்சிகளாய் அமைந்தன. உள் மனம் மண்ணையும், விண்ணையும் கடந்து எங்கோ சென்றது. இருப்பினும் அலங்காரங்கள் கண்களுக்குத் தாம் விருந்தாகும்; ஆன்மாவுக்கு அல்ல. பொது இடங்களில் மேல் நாட்டாரைப் போல நம் மக்களின் சமூக ஒழுக்கமும் (Social behaviour) திருந்தியமையும் நாளே உண்மையான திருநாளாகும்.

---

## செய்திகள்

**நிகழ்பவை:**

*18—12—83* ஞாயிற்றுக்கிழமையன்று திருநெல்வேலி ஜில்லா, சேரன்மஹாதேவி பாரத்வாஜ ஆச்ரமத்தில் **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்** அவர்கள் ஒருநாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

டிசம்பர் மாதம் *25*ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல பழைய மாணவர்கள் சங்கம் தபோவனத்தில் கூடும்; அன்று கிறிஸ்து ஜயந்தியை முன்னிட்டு இரவு *6-30* மணியிலிருந்து *7-30* மணிவரை ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்களும், பழைய மாணவர்களும் ஐக்கிய வணக்கம் செய்வார்கள்.

டிசம்பர் மாதம் *26*ஆம் தேதி திங்கட்கிழமை அன்று ஸ்ரீ சாரதா தேவியார் ஜயந்தியை முன்னிட்டு ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் இருபத்து நான்கு மணிநேரம் அகண்ட நாம பஜனையும், நண்பகல் ஒரு மணி நேரம் ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

*1984*ஆம் ஆண்டு ஜனவரி *1*ம் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை *5-30* மணியிலிருந்து விருதுநகர் சக்தி சங்கத்தில் நடக்கும் ஆண்டு விழாவுக்குத் தலைமை தாங்கி **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** சொற்பொழிவாற்றுவார்கள்.

*9—1—84* திங்கட்கிழமையன்று மாலை *4* மணிக்குமேல் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் பொங்கல் விடுமுறைக்காக அவரவர்கள் ஊருக்குப் புறப்படுவார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 8-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-50 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| சகோதரி நிவேதிதை | ... | 3-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | | |
| கருணாகரக் கடவுள் விரிவுரை | ... | 3-50 |
| பரிபூரணானந்தம் ஷை | ... | 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... | 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... | 3-00 |
| சுகவாரி ஷை | ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... | 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் ஷை | ... | 2-50 |
| மலைவளர் காதலி ஷை | ... | 1-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| அறம் வளர்த்த நம்பி (நாடகம்) | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் ஷை | ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் ஷை | ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் ஷை | ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி ஷை | ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| மாணிக்கன் | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| சைவன் யார்? | ..., | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் (நாடகம்) | ... | 1-00 |

| | | |
|---|---|---|
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 1-00 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... | 1-00 |
| தபோபலன் (நாடகம்) | ... | 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *சக்தி தத்துவம் | ... | 0 90 |
| *சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 1-25 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொருபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக்கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| கந்தர் அநுபூதி | ... | 0 25 |
| The Bhagavad Gita (11th Imp.) | ... | 24-00 |
| Tirukkural (with plastic cover) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna lives Vedanda | ... | 8-00 |
| Mahaveer Sri Hanuman | ... | 7-75 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Man Making Message | ... | 7-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| *Introducing the Gita | ... | 2-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The student | ... | 1-25 |
| The Teacher | ... | 1-00 |
| The School | ... | 1-00 |
| The Nursery School | .. | 1-00 |

DHARMA CHAKRAM December–'83 Regd. No. M. 60

# சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

பொருளாதாரத் துறையில் எந்நிலையில் உள்ளவர்களுக்கும் தர்ம சக்கரம் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சகாயசந்தா, சாதாரணசந்தா, டிபாசிட் சந்தா, சர்க்கார் நூல் நிலையங்களுக்கு இலவசமாக அனுப்புதல் ஆகிய முறைகளை நடைமுறையில் வைத்துள்ளோம்.

இன்றைக்குச் சமுதாயத்தில் மக்களுக்கு மனதைத் திருத்தி அமைக்கும் கருத்துக்கள் வழங்கப்படுவது அவசியமாகிறது. மக்கள் மனதிலுள்ள நல்லுணர்வுகளைத் தூண்டி விடவும், மக்களைப் பக்தி வழியில் நடாத்திச் செல்வதற்கும் தர்ம சக்கரம் மக்களில் பல பேருக்குக் கிடைக்க வேண்டும் என்று கருதுகிறோம். தர்ம சக்கர சந்தாதாரர்களின் எண்ணிக்கை அதிகமாகின்றவளவும், தர்ம சக்கரத்தைப் படிக்கின்றவர்களுடைய தொகை அதிகரிக்கின்றவளவும் மக்கள் மனதில் நல்ல திருப்பம் உண்டாகும்.

தை மாதம் தர்ம சக்கரத்தின் ஆண்டுத் துவக்கமாகும். இந்தச் சந்தர்ப்பத்தில் தர்ம சக்கர சந்தாதாரர்கள் புதிய சந்தாதாரர்களைச் சேர்ப்பதற்கும், ஆண்டுச் சந்தா முடிவுறும் சந்தாதாரர்களை மீண்டும் புதுப்பிப்பதற்கும் முயல்வார்களானால் அது ஒரு சிறந்த ஞான கைங்கர்யமாகும். புதிய சந்தாதாரர்கள் தை இதழ் முதல் சந்தாதாரர்களாகப் பதிந்து கொண்டால் தொடர்ந்து இதழ்களைப் பெற வசதியாக இருக்கும்.

தர்ம சக்கர சந்தாதாரர்கள் ஒவ்வொருவரும் மார்கழி, தை மாதங்களுக்குள் குறைந்தது மூன்று புதிய சந்தாதாரர்களையாவது தர்ம சக்கரத்துக்குச் சேர்த்துத் தருவது என்று உறுதிசெய்துகொண்டு செயல்படுவார்களானால் தர்ம சக்கர சந்தாதாரர்களின் எண்ணிக்கை சுலபமாக உயர்ந்துவிடும். எவ்வளவுக் கெவ்வளவு புதிய சந்தாதாரர்களைச் சேர்க்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு ஆன்மிகத்துறையில் நீங்கள் நற்பணி செய்தவர்களாகிறீர்கள். சந்தாதாரர்களின் விலாசங்களை எழுதிச் சந்தாத் தொகையையும் அனுப்பிவைத்தால் அவர்களைச் சந்தாதாரர்களாகப் பதிவு செய்துகொண்டு மாதா மாதம் முறையாக அவர்களுக்குத் தர்ம சக்கரம் அனுப்பி வைக்கப்படும். தர்ம சக்கரம் சந்தாச் சேர்க்கும் பணியில் ஊக்கம் காட்டுமாறு சந்தாதாரர்கள் வேண்டிக்கொள்ளப்படுகிறார்கள்.

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சிகளாக இருக்கின்றன. எப்பொழுது வேண்டுமென்றாலும் திரும்பவும் வாசிக்கக் கூடிய ஒரு நூலாக இது அமைந்துள்ளது. எனவே ஓர் ஆண்டின் பன்னிரண்டு தர்ம சக்கர இதழ்களையும் பொருளடக்கத்துடன் பைண்டு செய்து வைத்துக்கொண்டால் அது ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்பதற்கும், மற்றவர்களுக்குப் படிக்கத் தருவதற்கும் பைண்டு செய்த நூல் பயன்படும்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.